முதற்பதிப்பு: தி. பி. 2025 நளி (நவம்பர்-திசம்பர் 1994)
இரண்டாம் பதிப்பு: தி. பி. 2026 விடை (மே-சூன் 1995)
மூன்றாம் பதிப்பு: தி. பி. 2026 கும்பம் (பிப்ரவரி-மார்ச்சு 1996)
நான்காம் (திருத்திய) பதிப்பு: தி. பி. 2026 விடை (மே-சூன் 1996)
ஐந்தாம் பதிப்பு: தி. பி. 2037 சிலை (திசம்பர் 2006)
பத்தாம் பதிப்பு: தி. பி. 2044 மீனம் (மார்ச்சு-ஏப்பிரல் 2013)
பதினோராம் பதிப்பு: தி. பி. 2045 மீனம் (மார்ச்சு-ஏப்பிரல் 2014)

நூற்பெயர்: **திராவிடத்தால் வீழ்ந்தோம்!**
**(*Draavidaththaal VeezhndhOm!*)**

ஆசிரியர்: **குணா**
(Guna)



விலை: உருவா 25.00

வெளியீடு: **தமிழக ஆய்வரண்**
3155/ஏ, எச். ஏ. எல். இரண்டாம் கட்டம்
வெங்காலூர் 560 008

நூல் விற்பனை: **அரிமாவளவன்**
தமிழர் களம்
தமிழர்நாடு
கைபேசி 9943275926

அச்சு: **ஆண்டோ ஆர்ட்கிராஃப்ட்சு**
சிவகாசி 626 189

# தமிழன் தமிழனாக...!

இந்திக்காரன் இந்திக்காரனாக வாழ்கிறான். கன்னடன் கன்னடனாக வாழ்கிறான். தெலுங்கன் தெலுங்கனாக வாழ்கிறான். மலையாளி மலையாளியாக வாழ்கிறான்.

“நாம் மட்டும் திராவிடனாக வாழ வேண்டுமா?” என்பதுதான் நம்முன் உள்ள கேள்வி.

ஆரிய மாயை நம்மை அலைக்கழித்தது. ‘திராவிட’ மாயை நம்மைத் திசைதிருப்பியது.

நாம் தமிழர், நமது மொழி தமிழ், நமது நாடு தமிழர்நாடு என்கிற உணர்வு பெருக வேண்டும். பிற மாயைகளிலிருந்து நாம் விலக வேண்டும்.

இது தமிழர்நாடா, வந்தேறிகளின் வேட்டைக்காடா என்பதைத் தமிழர் ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

தமிழே உலகத்தின் முதன்மொழி; மாந்தனின் பிறந்தகம் குமரிக் கண்டம்; தமிழ், திராவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமும் ஆகும் என்றறைந்தார் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர்.

அறிஞர் குணாவின் **திராவிடத்தால் வீழ்ந்தோம்!** என்ற இந்த நூல் பாவாணர் வழி சுட்டும் காலக்கண்ணாடி. இந்நூல், தமிழனைத் தமிழனாக அடையாளம் காட்டும் நூல்.

நீண்ட நெடிய தமிழ் வரலாற்றில் தமிழருக்கு எத்தனையோ பகைகள் வந்தன; வீழ்ந்தன. ‘திராவிடம்’ கேள்போல் பகை; ஓர் ஒட்டுண்ணி; அண்டிக் கெடுப்பது. இதைத் தமிழர்கள் உணர வேண்டும். ‘திராவிட’ மாயையிலிருந்து விடுபட வேண்டும். தமிழர் என்ற உணர்வுகொள்ள வேண்டும்.

திராவிடம் பேசுபவர்களே நம் முதல் எதிரிகள்; மற்றவர்கள் அவர்களுக்குப் பின்னரே.

திராவிடம் பேசியவர்கள் — பேசுபவர்கள் — எவ்வளவு பெரிய தலைவராய் இருந்தாலும் இதில் விட்டுக்கொடுப்பதற்கு இடமில்லை.

இந்த உணர்வை இந்த நூல் தரும்; தர வேண்டும்.

தமிழர்கள் தமிழர்களாக வாழ வேண்டும்.

**தமிழக ஆய்வரண்**

## சகரத்தை மீட்போம்!

காவிரிக்குத் தெற்கேயுள்ளவர்கள் பொதுவாகச் சகரத்தைச் 'ச' (*Cha*) என்று சரியாகவே ஒலிப்பராம். காவிரிக்கு வடக்கே அச் சகரம் ஸகரமாகிச் சோறு (*Choru*) என்பது 'ஸோறு' (*Soru*) என்றும், செல்வம் (*Chelvam*) என்பது 'ஸெல்வம்' (*Selvam*) என்றும் திரிந்து ஒலிக்கும். சகரம் அவ்வாறு ஸகரமாவது, தமிழ் எதிர்ப்பினைத் தானறிந்த தன்வினையாகக்கொண்ட பிராமணருக்கு எடுத்த கையாகியது. அந்த ஸகரத்தை அவர்கள் வேண்டுமென்றே ஷகரமாக (*Sha*) ஒலிக்கத் தலைப்பட்டுள்ளனர். நேற்று வரையில் 'அவாள், இவாள்' என்று பேசுவதன் வாயிலாகத் தாங்கள் இன்னாரெனக் காட்டிக்கொண்டனர். அந்த 'அவாள், இவாள்' சாதிநடை இன்று நகைப்பிற்குரியதாகப் போய்விட்டதால், சகரத்தை ஷகரமாக ஒலிப்பதன் வாயிலாக அவர்கள் தம் சாதி அடையாளத்தைக் காட்டிக்கொள்கின்றனர்.

க ——— ங
ச ——— ஞ
ட——— ண
த ——— ந
ப ——— ம

ஆகிய தமிழ் உயிர்மெய்யெழுத்துகளில், **க, ச, ட, த, ப** முதலான வல்லின உயிர்மெய் எழுத்துகளை விரிவாக்கியதாலேயே வடமொழிகளில் *Ka, Kha, Ga, Gha* போன்ற வருக்க ஒலியன்கள் தோன்றின. வடமொழிகளில் ஞகரம் இருந்தும், அதை 'ஞ' என ஒலிக்காமல் 'க்ஞ' என்றோ, 'க்ய' என்றோ ஒலிப்பதும் அதனை மெய்ப்பிக்கும். அவற்றில் 'ச' வரிசையில் சகரமே (*Cha*) முதல் எழுத்தாகும். இதுவே தமிழில் ஸகரம் முதல் எழுத்தாக வர முடியாது என்பதைக் காட்டும். தமிழில், அச் சகரமே ஒரு சொல்லுக்கு இடையில் ஸகரமாக மாறி ஒலிக்குமே யன்றி, ஸகரம் (*Sa*) முதல் எழுத்தாக வரவே வராது. சகரம் (*Cha*) மட்டுமே முதல் எழுத்தாக வரும். அதனாலேயே ஸகரம் முதலான வடவொலி எழுத்துகள் வடிக்கப்பட்டன.

தமிழர்கள் சகர (*Cha*) ஒலிப்பை மீட்கத் தவறுவாரெனின், அது தமிழைக் கெடுத்து மெல்ல ஒழிக்கப் பார்க்கும் வடுகச் சூழ்ச்சிக்கே கைகொடுக்கும் என்பதைத் தமிழுணர்வாளர்கள் உணர வேண்டும். சரியாக ஒலிப்பதன் வாயிலாகச் சகரத்தை மீட்பது, தமிழைக் கண்ணெனப் பேணும் தமிழ்க்காப்பு வினையே யன்றி வேறில்லை.

## முன்னுரை

ஆரியக் கோணத்திலிருந்து தமிழர்களின் வரலாற்றைப் பலர் எழுதியதுண்டு. திராவிடப் பார்வையைக்கொண்டு வரலாறு எழுதிய வரும் உண்டு. அவை யாவுமே தமிழரின் வரலாற்றைக் கொச்சைப் படுத்தவும் இருட்டடிப்புச் செய்யவுமே பார்த்தன வென்பது பட்டறிவு.

இதனால், அடுத்து வரும் பத்தாண்டுகளுக்குக் கடுமையாக உழைத்துத் தமிழரினப் பார்வையில் தமிழரின் வரலாற்றை எழுதுவதற்காகவென இனி யாதொரு கருத்தரங்கிலும் கலந்துகொள்வதில்லையென நான் முடிவெடுத்திருந்த நிலையில், பாட்டாளி மக்கள் கட்சியின் இளைஞரணியிடமிருந்து 1994 சூன் 25-26ஆம் பக்கல்களில் குடந்தையில் நடத்தவிருந்த கருத்தரங்கில் **திராவிட மாயை** என்னும் தலைப்பில் கருத்துரையாற்ற ஓர் அழைப்பு வந்தது. கொடுக்கப்பட்டிருந்த தலைப்பு, என்னுடைய முந்தைய முடிவில் ஓர் இளக்கத்தை ஏற்படுத்தியது. அந்தக் கருத்தரங்கிற்காக நானெழுதிய நீண்ட கட்டுரையே இஃதாகும். கருத்தரங்கை ஏற்பாடு செய்தவர்களுக்கும் எனக்கும் இடையிலான செய்திப் போக்குவரத்தில் ஏற்பட்ட சுணக்கத்தால், அதில் பங்கெடுக்க முடியாமல் போயிடினும், அந்தக் கருத்தரங்கிற்கான அழைப்பே இக் கட்டுரையை எழுதத் தூண்டுகோலானது.

இன்னும் பத்துப் பதினைந்து ஆண்டுகளில் ஈ.வெ. இராமசாமிப் பெரியார் கட்டியமைத்த திராவிடர் கழகத்தின் தொடக்கக்கால உறுப்பினர் யாருமே இருக்கமாட்டார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினை நிறுவிய தலைமக்கள் யாருமே இருக்கப்போவதில்லை. அவற்றின் வழிவந்த பிற கழகங்களோ, பெயருக்குத்தாம் அவற்றின் கொள்கைவழி நிற்பன.

செத்த உடம்பை ஒரு பக்கத்தில் வைத்துக்கொண்டு, சாகக் கிடக்கின்ற அவற்றின் திராவிடக் கொள்கையை இந் நிலையில் ஆழமாக அலச வேண்டியுள்ளது. வளர்ந்துவரும் தமிழ்த் தேசிய ஓர்மைக்கு நல்ல ஊட்டமும் தெளிவும் கிடைக்கும் என்பதைக் கருதியே, இந்த ஆய்வை நடத்த வேண்டியுள்ளது. அத் திராவிடக் கொள்கை, தமிழக அரசியல் வாழ்வியலின்மீது முக்கால் நூற்றாண்டுகளாக அழுந்தக் குந்திக் கிடந்ததனால், தமிழுக்கும் தமிழரினத்திற்கும் நன்மைகளை

விடத் தீமைகளே மிகுந்தன வென்பதைத் தமிழரில் இளம் தலைமுறை யினருக்கு மிகத் தெளிவாகப் புலப்படுத்தியே ஆகவேண்டும். இத னால், எட்டிக் கசப்பான சில உண்மைகளையும் இந்தக் கட்டுரையில் உள்ளடக்க நேர்ந்தது.

குறுநூலாக வடிவெடுத்துள்ள இந்தக் கட்டுரை, நல்ல தூசியைக் கிளப்பும் என்பதை நூலாசிரியன் என்னும் வகையில் நன்கறிவேன். தமிழரினத்தின் நலன் கருதி, ஒரு வரலாற்றுப் பணியைச் செய்யாம லிருக்க இயலவில்லை. உண்மை விளங்கியும், அதைப் புலப்படுத் தாமை கயமையாகுமன்றோ? அதை மனத்தில் கொண்டே, சில கருத்து களைக் கட்டுரையாக்கித் தமிழ் மக்களின் முன்னால் படைத்திடத் துணிந்தேன். போற்றல்களாயினும் தூற்றல்களாயினும், அவற்றையெல் லாம் கட்டிச் சுமக்கத்தானே வேண்டும்? அவை யாவும் காலம் என் மேல் ஏற்றிட்ட பொதியே எனக் கருதி, விளைவைப்பற்றிக் கவலை கொள்ளாமல் ஏடெடுத்தேன் எழுதுவதற்கு.

கட்டுரையைத் திருத்தி உதவிய பேராசிரியர் கு. பூங்காவனம், புலவர் மகிபை பாவிசைக்கோ ஆகியோருக்கும், அதை நூல் வடிவில் கொணர உதவிய முனைவர் ந. அரணமுறுவல் அவர்கட்கும் தம்பி கி. வெற்றிச்செல்வனுக்கும் நன்றியுடையவனாவேன். இந் நூல் நன்கு வெளிவர உதவிய அனைவருக்கும் அச்சிட்டோருக்கும் என்றும் குறையா நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆக்கமுடன் திறனாய்க!

**குணா**
1994

**மேற்கோள்கள் முடிந்த வரையில் தனித்தமிழில் தரப்பட்டுள்ளன.**



**எங்கள் பாவாணருக்கு**

# திராவிடத்தால் வீழ்ந்தோம்!

காலம்தாழ்த்தி நாம் கண்விழிக்கின்றோம்! மண்ணிருந்தும் தம் மண்ணை இழந்த மக்களான தமிழ் மக்கள், விழியிழந்து வழியிழந்து நாடோடி இனமாகக் கெட்டழிந்து வருவதைப் பார்க்கின்றோம். பெயருக்கொரு தமிழ்நாடு! ஆனால் அங்குத் தமிழரிடம் ஆட்சியும் அரசும் கொற்றமும் கொடியும் நிலமும் கடலும் வானும் இல்லை. தமிழனின் மானத்தை மறைக்க உதவிய நான்கு முழத் துண்டும் பறி போன கதையாய், தாய்த் தமிழகமே இன்று வேலியில்லா நிலமாகி, வாசலில்லா வீடாகி, வந்தாரை **மட்டுமே** வாழ வைத்துக்கொண்டிருக் கின்றது! தமிழகம் இன்னொரு பாசுனியாவாகக்கூடிய கேடு நம்மைப் பேரிருளாய்ச் சூழ்ந்துவருகின்றது.

## பொங்கின பால் பொய்ப் பால்

அரை நூற்றாண்டாகத் தமிழகத்தை ஆட்கொண்டுவந்த திரா விடக் கொள்கையியலே, தமிழரினம் மேன்மேலும் கெட்டமைக்கான பெரிய காரணமெனக் கூறினால், சிலரது புருவங்கள் அகடுமுகடாக அலையோடும்.

திராவிடக் கொள்கை ஒரு வரலாற்று விளக்கம். அதன் எதிர் மறையே ஆரியக் கொள்கை. ஆடுமாடு மேய்க்க வந்த ஆரியராம் அநாகரிகர்கள் ஆண்டைகளாகித் தமிழரினத்தை அடிமைப்படுத்திச் சாதிகளையும் வண்ணங்களையும் அதன்மேல் சுமத்திக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கியதாலேயே 'திராவிடர்கள்' வீழ்ந்தனர் என்பதும் அடிமைப்பட்டனர் என்பதும் திராவிடக் கொள்கை முன்வைத்த மிக எளிய வரலாற்றியல் விளக்கம். ஆரியக் கொள்கையின் மறுபக்கம் தான் திராவிடக் கொள்கை. ஆரியமும் திராவிடமும் சியாமிய ஒட்டுப் பிறவிகள். ஆரியக் கொள்கை, திராவிடக் கொள்கை ஆகிய இரண் டுமே இனவெறிக் கொள்கைகளாகும். அந்தத் திராவிடக் கொள்கை முதலும் கோணல் முற்றும் கோணலென்றிருந்தும், தமிழரில் அறிவரும் அரசியலாரும் அந்தக் கொள்கைக்கு ஏதோவொரு வகையில் ஆட் பட்டு, நம்முடைய உண்மை வரலாற்றை நாம் மேன்மேலும் இழக்கவும் கெடுக்கவும் பெருங்காரணமாயினர்.

## மெய்யென்றிருந்தேன்;
## விழித்தேன் நனவாக்க!

தமிழரின் தாயகம் கடைக்கழக(சங்க)க் காலத்திலேயே வேங்கடம் முதல் குமரி வரையெனக் குன்றிவிட்டது. அவ்வாறு தமிழரின் தாயகம் சுருங்கிய பின்னர், எந்த ஒரு நேரடி ஆரியப் படையெடுப்பாவது தமிழகத்தின்மீது நடந்ததுண்டா? இல்லையே! வடவாரியப் படையெடுப்பாளரும், தமிழர்களை வென்றதுண்டா? மாலிக்காஃபூரின் படையெடுப்புக்கு முன்னால் எந்த வடவராவது தமிழகத்தின்மீது படையெடுத்து அதைப் பிடித்துவைத்து ஆண்டதுண்டா? இல்லையே! ஆங்கிலேய வந்தேறி ஆட்சிக்குப் பின்னாலன்றி, யாதொரு வடவாரியரும் தமிழகத்தைப் பிடித்து நேரடியாக ஆண்டதில்லையே!

கோசர்களுக்குப் பழையனுடைய மோகூர் பணிய மறுத்ததால், அக் கோசர்க்குத் துணையாக வந்த வம்ப மோரியர் படையெடுப்பைப்பற்றி அகநானூறு கூறும் ஒரு செய்தி நம்முடைய வரலாற்றறிவுக்கு எட்டுகின்றது.

**நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண்**
**தங்கலர் வாழி தோழி வெல்கொடித்**
**துனைகா லன்ன புனைதேர்க் கோசர்**
**தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்**
**இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்**
**தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்**
**பணியா மையிற் பகைதலை வந்த**
**மாகெழு தானை வம்ப மோரியர்**[1]

என்னும் அகநானூற்று வரிகள் அதைச் சொல்கின்றன.

வடவராம் அந்த வம்ப மோரியரையும் மோகூர்ப் பழையன் என்னும் பாண்டியர் படைத்தலைவன் எல்லையிலேயே முறியடித்து விரட்டியடித்துவிட்டான்.

வடநாட்டு ஆரியவரசன் ஒருவன் மிகப் பெரும் படையோடு வந்து தமிழகத்தின்மீது படையெடுத்தபோது, திருக்கோயிலூரை ஆண்டுவந்த மலையமான் திருமுடிக்காரி அவனுடைய படைகளையெல்லாம் தென்பெண்ணையாற்றின் தென்மேற்கிலிருந்த முள்ளூர் என்னும் இடத்தில் முறியடித்து, அந்த ஆரியப் படைகளை ஓடவோட விரட்டினான் என்பதைச் சொல்லும்,

**ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்**
**பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது**
**ஒருவேற்கு ஓடி யாங்கு...**[2]

என்னும் நற்றிணை வரிகள் இன்னொரு குறிப்பாகும்.



ஒட்டுமொத்தத்தில், பெரிய வடவாரியர் படையெடுப்புகள் எதுவும் விந்தியமலைக்குத் தெற்கே வெற்றி பெற்றதேயில்லை. மாறாக, தமிழ்ப் பேரரசர்களே வடக்குநோக்கிப் படைசெலுத்தி வென்று கொடி நாட்டிய வரலாறுகள் உண்டு. ஆயினும், வென்ற இடங்களை எந்தத் தமிழரசனும் பிடித்தாண்ட வரலாறு இல்லை. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், சேரன் செங்குட்டுவன், பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் முதலானோர் பல ஆரிய நாடுகளை வென்று திறை கொண்டனரேயன்றி, அவற்றைப் பிடித்தாள எண்ணியதேயில்லை.

இதனால், வடஇந்தியாவில், விந்தியமலைக்கு மிகவும் அப்பால், நடந்த வரலாற்று நிகழ்வுகளை வைத்து, அவ் வடஇந்திய வரலாற்றைச் சென்ற இரண்டாயிரம் ஆண்டுக்காலத் தமிழக வரலாற்றின்மீது கண்மூடித்தனமாகத் திணிப்பது பெருந்தவறு. இங்கு தான் தமிழர்மீது திணிக்கப்பட்ட ஆரிய-திராவிடக் கொள்கை முதல் அடியை வாங்குகின்றது. இந்த வரலாற்று ஓர்மை அடிமனத்தில் பொதிந்திருந்ததாலேயே, திராவிடர் இயக்கத்தைச் சேர்ந்தவராயிருந்தும், 'திராவிடத் தமிழகம்' என்ற குழப்பத்திலிருந்து மெல்ல விடுபட்டுத் தமிழ்த் தேசியத்தின்பால் வந்த பாவேந்தர்,

| | |
|---|---|
| **தெற்கை வடக் காண்ட** | **தெந்நாள்? – இல்லை** |
| | **முன்னாள் அஃ** |
| | **திந்நாள் கேள்** |
| **சீர்பட வேண்டுமன்றோ** | **உன் நாள்? நல்ல** |
| **திருவேண்டும் புகழ்வேண்டும்** | **தமிழ்க்குரிமை வேண்டும்** |
| **தீயர் தொலையும் நாளே** | **பொன்னாள்**[3] |

எனப் பாடுகின்றார்.

## மெய்ம்மை சாற்ற,
## வையம் ஏற்கும்!

தமிழகத்திற்குள் ஆரியர்கள் புகுந்ததே இல்லையாவென்பது அடுத்த கேள்வி.

கைபர், போலன் கணவாய்களின் வழியாக வந்ததாகக் கூறப்படும் ஆரியர்களோ, ஆரிய வழியினரெனக் கூறிக்கொண்ட வடவரோ, தமிழகத்தைப் படைகொண்டு வென்ற வரலாறே இல்லை. ஆனால், அருகம் (சைனம்), புத்தம் முதலான ஆரியச் சமயங்களின் வழியாக மட்டுமே, ஆரியக் கொள்கையும் பண்பாடும் தமிழகத்திற்குள் புகுந்தன.

எண்ணியம் (சாங்கியம்), ஆசீவகம், உலகாய்தம் முதலான பல வடிவங்களாகக் கிளைத்த வள்ளுவ மெய்யியல் விளக்கங்களிலிருந்து வடவர்கள் அறிவுக் களவாடல் செய்ததன் விளைவாக வந்த அருகம்,

புத்தம் ஆகிய ஆரியச் சமயநெறிகள், வள்ளுவ மெய்யியலைக் கெடுத்துக் குறைபடுத்தி அழித்ததுடன், அதனைத் தம்வயமாக்கிக் கொள்ளவும் செய்தனவென்னும் வரலாறு ஒருபுறம் கிடக்கட்டும். ஆரிய மதங்கள் என்று சொல்லித் தம்பட்டமடித்துவந்த அருகமும் புத்தமும் பிராம ணியத்தை அவ்வப்போது எதிர்த்தன வென்பதும் உண்மை. ஆனால், **பார்ப்பாரியம்** வேறு, **பிராமணியம்** வேறு, **ஆரியம்** வேறு என்னும் வேற்றுமை தெரியாத திராவிடக் கொள்கையர், அம் மூன்றும் ஒன்றே யென எண்ணி மயங்கியது மிகப் பெரிய கேட்டை விளைவித்துள்ளது. அருக, புத்தச் சமயநெறிகளைக் கண் மூடித்தனமாகப் போற்றுகின்ற நிலைபாட்டில் அஃது அவர்களைப் புதைத்துள்ளது.

வள்ளுவமும், அதன் எதிர்மறையான பிராமணியமும் தெற்கில் தோன்றியவை. தெற்கில் தோன்றி, வடக்குநோக்கிப் பரக்க நெடுக்கப் பயணம் போன சாதிநெறிக் கொள்கையே பிராமணியம். ஆனால், கலப்பினக் கொள்கையான ஆரியம் என்ற நிறவெறிக் கொள்கையோ, வடக்கில் தோன்றித் தெற்கே வந்தது.

இத்தகைய நுட்பமான வரலாற்று விளக்கம் பெரியாரிடம் இல்லாமல் போனதால், அவர் பார்ப்பனியத்தையும் பிராமணியத் தையும் ஆரியத்தையும் ஒன்றாகப் போட்டுக் குழப்பிக்கொண்டார். ஆரியப் பூச்சாண்டியையே தம் திராவிட அரசியலாக்கிக்கொண்டார். (கைபர்-போலன் கணவாய்களின் வழியாக வந்ததாகச் சொல்கின்ற) நிகழாத — இல்லாத, பொல்லாத — ஆரியப் படையெடுப்பை நம்மீது சுமத்தினார்.

## எண்ணத் தொலையாது, ஏட்டிலடங்காது!

இத் துணைக்கண்டத்திலேயே முதன்முதலாக ஒரு கட்டுக்கோப் பான பிராமணராட்சியைப் (Brahmanocracy) பரசுராமன்தான் அமைத் தான். அஃது ஆழ்ந்த தென்முனையிலேயே அமைக்கப்பெற்றது. பரசு ராமன் படைத்த பிராமணியத்தின் கட்டுக்கோப்பான கருத்தியல் வடிவமே ஆதிசங்கரன் ஆக்கிய கருத்திய ஒருமையிய (அத்துவைத) மெய்யியலும் சமயக் கோட்பாடுகளும் நெறிகளும் மடங்களுமாகும். இன்று காணும் 'கட்டுக்கோப்பான பிராமணியம்' என்பது ஆதிசங்க ரரின் ஒருமையியமே (அத்துவைதமே) என்று கருதுவாரும் உண்டு.

கீழ்ச்சாதியினர் பலரான ஆழ்வார்களின் இறையன்பு நெறியைத் திரித்துப் புரட்டி, அத்துவைதத்துடன் ஆழ்வார்களின் நெறியைக் கரவாக மயங்கச் செய்த வேதாந்த தேசிகனுக்குப் பிறகு தமிழ் மாலிய மும் அப் பிராமணியத்தின் மற்றொரு கிளையாகத் திரிந்து இறுகியது.



மடங்கள் என்ற கட்டுக்கோப்பான மாபெரும் வளாகங்களுக் குள் நெறிப்படுத்தப்பட்ட அப் பிராமணியமே, ஆதிசங்கரர், இராமா னுசர், மாதவர் ஆகிய தென்னகப் பிராமணரின் வழியாக வடக்கு நோக்கிப் பரந்து படர்ந்தது.

பிராமணியக் கொடுநெறிகளைச் சட்டவடிவமாக்கிய **மனுநூல்**, வடவாரியரால் ஆக்கப்பட்ட நூல் அன்று. அது கி. பி. நான்காம் நூற்றாண்டளவில் கருநாடகத்துக் கடம்பப் பேரரசனான மயூரவர்ம னின் அவையில் அரங்கேற்றப்பெற்ற சட்டநூல்.[4] **மானவக் குலம்** என்பது '**அரிபுத்திரனின் வழிவந்த**' கடம்பரையும் சளுக்கியரையுமே குறித்தது. **மானவத் தருமநூல்** எனப்பட்ட மனுநூல், இதனால் கருநாடகத்துக் கன்னட அரசர் ஆக்கிய நூலேயாகும். அதையொத்த **ஆவத்தம்பா சூத்திரம், போதாயன சூத்திரம், நாரதர் சூத்திரம்** முத லான பிராமணியச் சட்டநூல்களும்கூடத் தென்னகத்தின் 'திராவிட' அரசுகளால் ஆக்கப்பெற்ற சட்டநூல்களே யாகும்.

## கெடுத்தவனே அடுத்தவன்தான்!

தமிழகத்தின்மேல் ஆரியர் படையெடுத்து வெல்லவில்லை யெனின், வேறு யார்தான் அவர்களை வென்றனர்?

வேங்கடம் முதல் குமரி வரை என்றான தமிழகத்தின்மீது முதன் முதலில் நடந்த மிகப் பெரும் படையெடுப்பு களப்பாளர் படை யெடுப்பேயாகும். இந்தக் களப்பாளர்கள் இன்றைய கருநாடகப் பகுதியிலிருந்து வந்த கன்னட வடுகர்கள். அவர்கள் தமிழ்நாட்டைச் சூறையாடினர். தமிழகத்தில் ஒழுங்கானதும் நிலையானதுமான ஓர் அரசும் இல்லா ஆட்சிக்குழப்பத்தை (Anarchy) ஏற்படுத்தினர்.

களப்பிரர்களை அடுத்துத் தமிழகத்தின்மீது படையெடுத்து ஆண்டவர்கள் பல்லவர்கள். இவர்கள் தெலுங்கு வடுகர்களாவர். பல்லவர், சோழர், பாண்டியர் என்று தமிழகத்துப் பேரரசுகளுடன் நேருக்கு நேர் மோதி நின்று வரலாறு படைத்தவர்கள் கன்னட வடுகர் களான சளுக்கியர் ஆவர். இவர்கள் தெலுங்குநாட்டையும் பிடித்துத் தம்வயமாக்கிக்கொண்டு கீழைச்சளுக்கிய நாட்டு ஆண்டைகளாகவும் ஆயினர். வேங்கியைத் தலைநகராகக் கொண்ட கீழைச்சளுக்கிய நாட்டிற்கு ஆளுநனாயிருந்த இராசேந்திரன் என்னும் வடுகன், சோழ ரோடு சளுக்கிய வடுகர் கொண்ட மணவினையால் வந்த கலப்பினத்த வனான சோழன் வீரராசேந்திரன் இறந்ததனால் சோழப் பேரரசில் ஆட்சி கெட்டுக் குழம்பி கிடந்தபோது, அந்தச் சோழநாட்டின்மீது படையெடுத்தான். வீரராசேந்திரனுக்குப்பின் சோழரின் ஆட்சிக்கட்டி லில் ஏறிய பரகேசரி அதிராசேந்திரனின் குறுகிய ஆட்சியின்போது

ஏற்பட்ட ஆட்சிக்குலைவைப் பயன்படுத்திக்கொண்டு கீழைச் சளுக் கியன் இராசேந்திரன் சோழநாட்டைப் பிடித்தான். அவனே முதலாம் குலோத்துங்கன் (கி. பி. 1070-1120) ஆனான். இந்த வடுகனை, வீரராசேந் திரனே சோழர்குலத்துப் பிள்ளையாக்கிக் (தத்தெடுத்துக்) கொண்டா னெனக் கதை திரிக்கப்பட்டது. **கலிங்கத்துப்பரணி**யை எழுதிய செயம்கொண்டாரின் கூற்றுகளும்கூட அத்தகைய பொய் வரலாற்றை எழுதுவதற்குத் துணைபோனது. முதல் குலோத்துங்கனுக்குப்பின் வந்த சோழர்களைச் **சளுக்கியச் சோழர்கள்** என்றே அழைப்பதுண்டு.

பல்லவர்களும், (அவர்களுக்குப்பின் வந்து தமிழ்ச் சோழர்களின் முடியையும் கொடியையும் கைப்பற்றிக்கொண்ட) போலிச் சோழர் களுமே கடம்ப மன்னனாகிய மயூரவர்மன் யாத்திடச் செய்த மனு நூலைக் கொணர்ந்து தமிழகத்தின்மீது திணித்தனர்.

முதலாம் குலோத்துங்கனின் திருவடிகளின்மீது அரசர்கள் அருகம் புல்லை வைத்து வாழ்த்திய பின்னர், 'மனுநெறி தலையெடுக் கட்டும்!' என்று சொல்லி அவனது தலையில் முடியைச் சூட்டியதாக வரும்,

**அறை கழல் அரசர் அப்பொழுது**
**அடிமிசை அறுகு எடுத்திட**
**மறையவர் முடி எடுத்தனர்**
**மனுநெறி தலைஎடுக்கவே**[5]

என்னும் கலிங்கத்துப் பரணியின் வரிகள் அதைத் தெளிவாக மெய்ப் பிக்க வல்லன.

சோழ மாமன்னனுக்கு வலப்புறத்தில் 98 சாதிகள் என்றும், இடப்புறத்தில் 98 சாதிகளென்றும் அமர்த்தி, **வலங்கைச் சாதி**யினர் என்றும் **இடங்கைச் சாதி**யினர் என்றும் பிரித்துத் தமிழரினத்தையே கூறுபோட்டுக் களமாடச் செய்தமைக்கு இடைக்கால வடுகச் சோழர் களே காரணராவர். தமிழகத்தின் மண்ணின் மைந்தரும் தொல்குடி யினருமான பழந்தமிழர்களை அடுத்தடுத்துத் தாழ்த்தி அவர்களை விலங்குநிலை வாழ்க்கைக்குத் தள்ளி அடிமையாக்கியவை கன்னடத் தெலுங்கு வடுக வந்தேறிகளின் படையெடுப்புகளேயாகும்.

அதற்கடுத்து வந்தது விசயநகர வந்தேறிகளின் தமிழ் மண் கவர்பு. பாண்டியப் பேரரசில் சக்களத்தி மக்களுக்கிடையில் நிலவிய அரசதி காரப் போட்டியில் தலையிடுவதன் வாயிலாகத் திரையன் குதிரை யைப் (Trojan Horse) போல் உள்ளே நுழைந்தது இவ் வடுகப் பேரரசு. பின்னர் நாகம நாயக்கன் என்பானின் வழியாக மதுரை அரசையே கைப்பற்றிக்கொண்டு, **நாயக்கர் அரசு** என்ற ஒரு வந்தேறி ஆட்சியை அமைத்தது.



தொடக்கக்கால நாயக்கர்கள் பெரிதும் கன்னடர்களாயிருக்க, பிற்கால நாயக்கர்கள் பொதுவாகத் தெலுங்கர்களாயிருந்தனர். இவ் விரு பிரிவினரும் தமிழகத்தை மடிபறித்துச் சுரண்டிக் கொழுத்தனர். தொன்றுதொட்டுவந்த **நாடு** என்னும் அடிப்படை ஆட்சிக்கூறையும் முறையையும் ஒழித்துக்கட்டிவிட்டு, **பாளையப்பட்டு** என்னும் புதிய படையாட்சி முறையைத் தமிழகத்தில் புகுத்தினர்.

நாயக்கர் ஆட்சியில், தமிழரினம் சாதிப் புதைசேற்றில் புதைந்தது. தீண்டாமை, காணாமை என்றெல்லாம் பழந்தமிழர்மீது பொல்லாச் சாதி ஒழுகலாறுகளைத் திணித்துச் சாதிவழியில் அமைந்த அடிமை முறைக்குக் கொம்பூதிய கொடிய சுரண்டலரின் ஆட்சியே வடுக வந் தேறி நாயக்கராட்சி. அந்த நாயக்கர் ஆட்சி, பிராமணியத்தை உச்சி முகர்ந்து சீராட்டி வளர்த்தது.

போதாமைக்கு, குல்பர்கா அரசினது பேராளனாகப் படை யெடுத்து வந்த வெங்காசி என்னும் மராட்டிய வந்தேறியின் படை யெடுப்பைத் தொடர்ந்து சோழர்களின் தலைநகராம் தஞ்சையில் மராத்தியர் ஆட்சி அமைந்தது. மராத்தியன் சிவாஜியின் கொள்ளை களும் அரங்கேறின. மராத்திய வந்தேறிகள், தமிழரின் குருதியை உறிஞ்சிக் குடித்துக் குடியும் கூத்தியுமாய்க் களியாட்டம் போட்டுவந் தனர். இம் மராட்டியர் என்ன வடவரா? அவர்களும் 'பஞ்ச திராவி டரில்' ஒருவர்தாமே?

இதனால், தமிழும் தமிழரினமும் ஆரியப் படையெடுப்புகளால் கெட்டனவா, 'திராவிட'ராம் கன்னடர், தெலுங்கர், மராத்தியர் ஆகி யோரின் படையெடுப்புகளால் கெட்டனவா?

ஆங்கிலேயரின் வரவுக்குப் பிறகு மட்டும் நிலைமை மாறிவிட் டதா என்ன? ஒன்றுக்குமே உதவாத வறண்ட பரப்புகளை மட்டுமே கள்ளர், மறவர் என்ற தமிழ்ச் சாதியினரிடம் விட்டுவைத்த நாயக்கர் ஆட்சியில், வடுக வந்தேறிகளே பெரும்பான்மையான பாளையப் பட்டுகளை வைத்திருந்தனர். மெல்ல மெல்ல ஊடுருவி, மதுரை ஆட்சியின் பேரால் வரி தண்டும் உரிமையைப் பெற்ற கிழக்கிந்தியக் குழுமப் படைகளுக்குப் பூலித்தேவன், மருது பாண்டியர் முதலான வர்களை அடுத்தடுத்துக் காட்டிக்கொடுத்து இரண்டகம் செய்ததுடன், ஆங்கிலேயர் ஆட்சி தமிழகத்தில் நிலைகொள்வதற்கு வந்தேறி வடுக ஆண்டைகள் மிகப் பெரும் காரணமாக இருந்ததே வரலாறு.

பாஞ்சாலக்குறிச்சியின் கட்டபொம்மு முதலான தெலுங்குப் பாளையக்காரர்கள், வழிப்பறிக் கொள்ளையர்களாய்த் தமிழ் மக்களை அரட்டியும் அலைக்கழித்தும் வந்தனர்.

## திறந்த வீட்டில் நுழைந்த நாய்!

ஆங்கிலயரின் வந்தேறி வல்லரசு, தமிழகத்தில் காலூன்றியது. இந்தி(ய) அரசு என்னும் ஒரு பன்னாட்டின அரசுக்குள் சென்னை மாநில மென்னும் இன்னொரு பன்னாட்டின அரசை உள்ளடக்கிய சூழலில், திராவிடராம் கன்னடரும் தெலுங்கரும் மலையாளிகளும் தமிழகத்திற்குள் ஊடுருவி, மண்பறிப்பு வடிவில் மடிபறிப்புச் செய்த துடன், தமிழகத்தின் எல்லையோரங்களிலுள்ள பச்சைத் தமிழ்ப்பகுதி களையெல்லாம் தத்தமது குடியேற்றங்களாக ஆக்கிக்கொண்டனர். ஐதரலி, திப்பு சுல்தான் காலத்தில் தமிழகத்தின் நீலமலைப் பகுதிகளில் அலையலையென வந்து குடியேறிய படுகர் (வடுகர்) எனப்படும் கன்ன டரில் தொடங்கி இக்காலத் தெலுங்கர் வரை, வந்தேறிகள் யாவரும் அரவமும் ஆரவாரமுமின்றித் தமிழர்களின் மண்ணை மேன்மேலும் கவர்ந்துவந்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் சென்னை மா காணத்திலடங்கிய தமிழக நாட்டுப்புறங்களில் ஊடுருவிய தெலுங் கர்கள், அவ் வூர்களை யெல்லாம் மெல்ல மெல்லத் தெலுங்குமயமாக் கினர். 'ஆட்டுத்தலைக்கும் மாட்டுத்தலைக்கும் கள்ளு மொந்தைக்கும் கம்பங்கதிருக்கும் கேழ்வரகுக்கும்' என அத் தெலுங்கு வந்தேறிகளிடம் கடன்பட்ட பழந்தமிழர்கள், தங்களின் நிலபுலங்களை இழந்தனர். கற்பொழுக்கம் என்பது என்னவென்றே அறியாத வந்தேறிப் பெண் டிரின் கவர்ச்சியில் ஏமாந்து, தத்தம் புலங்களையும் வீடுவாசலையும் இழந்த தமிழர்கள் பலராவர். வேட்டைநாயுடன் மண்வேட்டைக்கும் புறப்பட்ட கம்பளத்து நாயக்கர்கள், தென்பாண்டி நாடு வரையிலும் ஊடுருவி, பழந்தமிழரை ஏய்த்து மண்ணைக் கவர்ந்து பழையபாளை யத்து 'இராசாக்கள்' ஆகி, அதை 'இராசபாளைய'மாக மாற்றிக்கொண் டனர்.

பழைய சென்னை மாகாணத்தில், தெலுங்கர்களே அடுத்தடுத்து அதன் தலைமையமைச்சர்களாகவோ முதலமைச்சர்களாகவோ அமைச்சர்களாகவோ ஆண்டைகளாகவோ வர முடிந்தது. பேராயக் கட்சி ஆட்சியானாலும் அதே கதை; நயன்மைக் கட்சி ஆட்சியாயினும் அதே கதை!

தனி ஆந்திரம் கேட்டுப் போராடிய தெலுங்கர்கள், தமிழகத்தின் வளமான பகுதிகளையெல்லாம் அரிந்து சென்றனர். சித்தூர் மாவட் டம் போனது ஒரு பகற்கொள்ளை. மொழிவழி மாநிலம் என்னும் பெயரில் தமிழகம் தொன்றுதொட்டுவந்த வேங்கடமாம் வடவெல் லையை இழந்தது. ஒன்றியக் கேரளம் (ஐக்கியக் கேரளம்) கேட்ட மலையாளிகள் மடிபறித்துச் சென்ற வளம் கொழிக்கிற தமிழ்ப் பகுதி



களும் பலவாகும். எதையுமே கேட்டுப் போராடாத கன்னட வடுகர், தாம் கேட்காமலேயே பெற்ற பகுதிகளும் சின்னஞ் சிறியனவா? அவ் வாறு பறித்துச் சென்ற தமிழ்ப்பகுதிகளையெலாம் அத் 'திராவிடர்கள்' எவ்வளவு வெறித்தனத்துடன் கன்னடமயமாக்கவோ தெலுங்குமய மாக்கவோ மலையாளமயமாக்கவோ செய்துவருகின்றனர் பார்த்தீர் களா?

வேங்கடத்தை எந்த 'ஆரியன்' வந்து பறித்துச் சென்றான்? தெலுங்கனாகிய 'திராவிடன்'தானே அதைப் பட்டப் பகலில் கவர்ந்து சென்றான்? குமரியை இன்று மெல்ல மெல்ல அரித்துத் தின்றுகொண் டிருப்பவன் 'ஆரியன்' அல்லனே! 'திராவிட'னான மலையாளிதானே அந்தக் குமரி மாவட்டத்தின்மீது என்றுமே ஒரு கண்ணாயிருந்து அடுத்தடுத்து ஊடுருவிக் குடியேறி அதை மெல்லக் கவர்ந்து வருகின் றான்?

ஆரியப் பூச்சாண்டியைக் காட்டியே தமிழகத்தில் தம்மை நன்கு வலுப்படுத்தியும் வளப்படுத்தியும் கொண்ட தெலுங்கு, கன்னட ஆண்டைகள், மண்வெறி பிடித்த செர்பியர்கள் பாசுனியாவை அடா வடித்தனமாகக் கவர்ந்ததைப் போன்றே தமிழ்மண்ணை வடுகர்கள் விழுங்கிச் செரிக்கத் திராவிடக் கொள்கையே கருவியானது. கன்னட, தெலுங்கு நலன்களின் திசைதிருப்பல் உத்தியே ஆரியப் பூச்சாண்டி என்பது எந்தமிழருக்கு இன்னுமா விளங்கவில்லை?

தமிழர்கள் ஒரு தனி இனம் என்ற அடையாளத்தையே இழந்து வருகின்றனர். தமிழர்கள் திராவிடமயமாக்கப்பட்டுவிட்டதால், இனப்பற்றும் இனமானமும் இனநலனும் இழந்து சொந்த நாட்டி லேயே ஏதிலிகளாக்கப்பட்டுள்ளனர்; சேரிமாக்களாக்கப்பட்டுள்ளனர். அவர்களில் ஒரு பெரும்பகுதியினர், நாடோடிகளாகக் கெட்டலைந்து கொண்டிருக்கின்றனர். இதனைக் கண்டு நொந்துதானே ஈழத்துத் தேசியப் பாவலர்,

**வாழ்கின்ற நாடெல்லாம் உனது தாய்நாடா?**
**வாடகை வீடென்ன உன் சொந்த வீடா?**[6]

என்று நான்றுகொண்டு சாகும் வண்ணம் கேட்டார்? உணர்வற்ற ஓர் இனமாகத் தமிழரினம் ஆக்கப்பட்டது திராவிட மாயையால் தான் என்பது இன்னுமா விளங்கவில்லை?

நம் தமிழ் இன்று சேரி மக்கள் மொழியாகியுள்ளது. தமிழில் பேசுவதே தாழ்வு என்றும், தமிழனாக இருப்பதே ஒரு தாழ்வு என்றும் தமிழரே எண்ணுமளவுக்குத் தமிழரினத்திடையே மீமிகக் கேடான தாழ்வு மனப்பான்மையையே மக்கள் உளத்தியலாக்கித் தமிழரினப்

பகைஞர்கள் ஓரளவுக்கு வெற்றியும் கண்டுள்ளனர். இதைப் போன்ற இழிநிலைக்குத் தமிழ்நாட்டு வடுக வந்தேறி அரசியலான 'திராவிட' அரசியலே காரணமாகும்.

## கொடுத்துக் கெடுப்பான் மார்வாடி!

இன்று மிக வேகமாகத் தமிழகத்தில் குடியேறத் தொடங்கியுள்ள மார்வாடிகளின் எண்ணிக்கையிலான பெருக்கம் அச்சமூட்டுகின்றது. பிராமணர்-பணியா கட்சியென்று பேராயக் கட்சியை ஈ. வெ. இரா. மிகச் சரியாகவே அடையாளம் காட்டினார். தங்களை எதிர்ப்பவர் களை யெல்லாம் வெள்ளிக்காசு கொடுத்து விலைக்கு வாங்குவதில் வல்லவர்களென்பதை மார்வாடிகள் தமிழகத்தில் நன்றாகவே மெய்ப் பித்துவிட்டனர்.

திராவிட அரசியல் ஏற்றம்பெற்றுப் பட்டிதொட்டி யெல்லாம் படரத் தொடங்கியது, 1947ஆம் ஆண்டிற்குப் பிறகேயாகும். இந்தத் திராவிட அரசியல் வளர வளர, தமிழகத்தில் அதற்கு இணையான நேர்விழுக்காட்டில் (directly proportional to) மார்வாடிகளின் குடியேற் றமும் பெருத்தது. இப் போக்கு, ஒரு தற்செயலான நிகழ்வு அன்று. இதனால், திராவிட அரசியலுக்கும் தமிழகத்திலான மார்வாடிகளின் குடியேற்றத்திற்கும் இடையில் ஒரு கொப்பூழ் உறவு இருந்துவருவது புலனாகும்.

1949ஆம் ஆண்டில் ஈ. வெ. இரா.விடமிருந்து பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகத்தை அண்ணா தோற்றுவித்தபோது, திராவிடர் கழகத்திலிருந்த பெரும்பான்மை இளைஞர்கள் அண்ணாவின் பக்கம் சென்றுவிட்டனர். தி. மு. க.வின்கீழ் அணிதிரண்ட தமிழுணர்வுடைய இளைஞர்கள் எண்ணரியவராகப் பெருகினர். இதனால், அமைப்பு வகையில் ஈ. வெ. இரா.வின் திராவிடர் கழகம் குன்றியது. இந் நிலை யில், அண்ணாவுடன் ஈ. வெ. இரா. கொண்டிருந்த பகையே அடுத்த கட்ட அரசியலானது.

> "...அதாவது, தி. மு. க.தேர்தலில் வெற்றிபெறும்வரை நான் அந்தக் கழகத்திற்குப் படுஎதிரியாக இருந்தவன்."[7]

என்று அதைப்பற்றி ஈ. வெ. இரா.வே குறிப்பிட்டுள்ளார்.

அண்ணாவின் திராவிட முன்னேற்றக் கழகத்தின்மீது ஈ. வெ. இரா. கொண்ட பகைக்கு ஏற்பவே அவருடைய போராட்ட நெறி முறைகள் அமைந்தன. பேராயக் கட்சியுடனான அவரது உறவாடல் களும்கூட அவ்வாறே இருந்தன. இந் நிலையில், தம்மொடு இருந் தோரைத் தக்கவைத்துக் கொள்வதற்கென்று ஈ. வெ. இரா. பல போராட் டங்களை நடத்த வேண்டிவந்தது.



அவை:

1) இந்தி(ய)க் குடியரசு நாளாகிய 1950 சனவரி 26ஆம் நாளை இந்தித் திணிப்பை எதிர்க்கிற துயரநாளாகக் கொண்டாடியது.

2) சேலம் சிறையில் அடைபட்டிருந்த பொதுவுடைமைக் கட்சி யினர்மீது 15.2.1950 அன்று காவல்துறை நடத்திய துப்பாக்கிச் சூட்டிற்கு எதிராக 5.3.1950 அன்று கண்டன நாள் கடைப் பிடித்தது.

3) சாதிவழி இடவொதுக்கீட்டு ஆணை செல்லாது என்று 28.7.1950 அன்று சென்னை உயர்வழக்கு மன்றம் அளித்த தீர்ப் பினை எதிர்த்து 14.8.1950 அன்று நடத்திய பொதுஅடைப்பு; ஒவ்வொரு மாதமும் 14ஆம் நாளை 'வகுப்புவழி உரிமைநாளாகக்' கடைப்பிடிக்குமாறு வேண்டுகோள் விடுத்தது.

4) தமிழக நெசவாளரின் கோரிக்கைகளுக்கு ஆதரவாக 1950 அக்டோபர் 16 முதல் சென்னையிலும் நவம்பர் 1 முதல் தமிழகம் முழுவதும் வடநாட்டார் வைத்துள்ள துணிக்கடைகளின் முன்னால் மறியல் செய்தது; அதேபோன்று 'பிராமணாள்' என்னும் பெயர்ப்பலகை வைத்துள்ள உணவகங்களின் முன் னால் மறியல் செய்தது.

5) 1951 ஏப்ரல் 4ஆம் பக்கலைப் 'பேராயக்கட்சி ஒழிப்பு நாளாகக்' கடைப்பிடித்தது.

6) 1952 ஆகத்து 1ஆம் நாள் இந்தியெழுத்து அழிப்பு.

7) 1953 மே 27 ஆம் நாளன்று 'பிள்ளையார் சிலை உடைப்புப் போராட்டத்தை' நடத்தியது.

8) 1953 ஆகத்து 1ஆம் நாளன்று தொடர்வண்டி நிலையங்களில் இந்தியெழுத்தை அழித்தது.

9) 1955 ஆகத்து 1 அன்று இராசாசி கொணர்ந்ததாகக் கூறப்படும் குலக்கல்வித் திட்டத்தை எதிர்த்து இந்தி(ய)க் கொடியை எரிக்க அறைகூவல் விடுத்துப் பின்னர் அதைக் கைவிட்டது.

10) 1956 ஆகத்து 1 அன்று இராமன் படவெரிப்பு.

11) 1957 மே 5 முதல் மீண்டும் 'பிராமணாள்' பெயர்ப்பலகை அழிப்பு. இது 30.12.1957 வரையில் நடந்தது. 1957 திசம்பர் 2 வரையில் நடந்த இப் போராட்டத்தில் மொத்தம் 837 பேர் தளைப்பட்டுத் தண்டனை பெற்றனர்.[8]

12) 1960 சூன் 5 அன்று தமிழ்நாடு நீங்கலாயுள்ள இந்திய வரை படத்தை எரித்தது.

இவற்றுடன், காந்திப்பட எதிர்ப்பு, காந்திச்சிலை உடைப்பு பற்றிய அறைகூவல்களும் அடங்கும்.

அவற்றுள், வடநாட்டுத் துணிக்கடைகளின் முன்னால் நடத்தப் பட்ட போராட்டம் குறிப்பிடத்தக்கது. 1950 அக்டோபர் 10 அன்று சென்னை சைனா பசாரிலுள்ள ஆரியபவனம் என்ற உணவகத்தின் முன்பும், கிஷன்சந்த் செல்லாராம் கடையின் முன்பும் நடந்த மறியலில் 8 பேர் மட்டுமே தளைப்பட்டு விடுதலை செய்யப்பட்டனர்![9] 1950 நவம்பர் 1 முதல் தமிழ்நாடு முழுவதுமுள்ள வடவர் கடைகளின் முன்னால் மறியல் நடத்துவதென்று ஈ. வெ. இரா. அறிவித்தபோது, காமராசர் துள்ளியெழுந்தார். வடவருக்கு எதிரான போராட்டத்தைக் கடுமையாக ஒடுக்க வேண்டுமெனக் குரல் கொடுத்தார். அதன் விளைவாக வடவர் கடைகளின் முன்னால் மறியலில் ஈடுபட்ட திராவிடர் கழகத்தவர்கள் காவல்துறையினரால் மிகக் கடுமையாகத் தாக்கப்பட்டனர். மார்வாடிகளை எதிர்த்த போராட்டம் என்றவுடன் காமராசர் மிகவும் பதறிப்போய் நெஞ்சம் துடிதுடிக்கக் காரணம் இல்லாமலா இருந்திருக்கும்?

ஈ. வெ. இரா. நடத்திய வடவர் துணிக்கடை மறியல் மொத்தம் 151 நாட்கள் நடந்தது. அதில் மொத்தம் 556 பேர் மட்டுமே தளைப் பட்டு விடுவிக்கப்பட்டனர்.[10] பின்னர், நலிந்து கிடந்த தமிழக நெசவாளருக்கு அன்றைய சென்னை மாகாண அரசு சில சலுகைகளை வழங்கவே, அப் போராட்டத்தை நிறுத்திக்கொள்வதென 1951 ஏப்ரல் 1 அன்று திருச்சியில் கூடிய திராவிடர் கழகச் செயற்குழு முடிவு செய்தது. 1950-51ஆம் ஆண்டுகளில் நடந்த வடவர் துணிக்கடை மறியலுக்குப் பின்னர், ஈ. வெ. இரா. பெரியார் மார்வாரி, குசராத்திய ரான பணியாக்களைப் பெரிதாக எதிர்க்கவோ எதிர்த்துப் போராடவோ இல்லை. வடநாட்டுப் பணியாக்களை எதிர்ப்பது அவருடைய முகமையான நோக்கமாக இருந்ததுமில்லை.

சாதியெதிர்ப்பு, பிராமணரெதிர்ப்பு, கடவுளெதிர்ப்பு என்னும் கொள்கைகளில் நேரிய தெளிவும் ஆர்வமும் கொண்டிருந்த ஈ. வெ. இரா.வுக்குத் தெளிவான பொருளியல் கொள்கை இருக்கவில்லை. ஆனால், அன்றைய 'திராவிட' ஓர்மையின் அடிப்படையில், வடவரின் பொருளியல் சுரண்டலைப் பற்றிய நல்லதோர் அறிவு அண்ணாவுக்கு இருந்தது. இதனால் "வடக்கு வாழ்கிறது; தெற்கு தேய்கிறது" என்னும் மிகச் சரியான முழக்கத்தை அண்ணா முன்வைத்தார். தமிழ்த் தேசிய ஓர்மையே அந்த முழக்கத்தின் கருவாகவும் வடிவாகவும் இருந்தது. இதனால், திராவிட இயக்க இளைஞர்களிடை வடவர் வல்லரசு எதிர்ப்பு கனன்றெழுந்து கொழுந்துவிடத் தொடங்கியது.



இத்தகைய சூழலில், ஈ. வெ. இரா. வடநாட்டவர் துணிக்கடைகளின் முன்னால் மறியலை நடத்த முனைந்திருந்தார். அப்போது துடிப்புள்ள தமிழிளைஞர்கள் சிலர் இரவோடிரவாகத் தொடர்வண்டி நிலையங்களிலிருந்த இந்தி எழுத்துகளைக் கரியெண்ணெய் (தார்) கொண்டு அழிக்கத் தொடங்கினர். இதனால் அரசு அரண்டுபோய், அடக்குமுறையை ஏவிவிட்டது.

தி. மு. க. இளைஞர்களே அவ்வாறு செய்திருக்க வேண்டுமென்று ஐயுற்ற ஈ. வெ. இரா., இனி அவ்வாறு கமுக்கமான இந்தி அழிப்புக் கூடாது என்றும், காவல்துறையுடன் ஒத்துழைக்கும் வகையில் (போலி) மறியலே போதும் என்றும் அறிக்கை விட்டார்.

இவற்றை எல்லாம் வைத்து,

> "1950களில் சென்னையிலுள்ள செனாய்நகரிலும் சவுக்கார்பேட்டையிலும் வாழும் மார்வாடிகள்மீது தாக்குதல் நடைபெறும் என்ற அச்சம் நிலவும் அளவுக்கு இயக்கங்களுக்கு அவர்கள்மீது வெறுப்பு இருந்தது. ஆனால் அந்த நேரத்தில் அம்பீசு கபே என்னும் உணவகத்தின் பெயர்ப்பலகையிலிருந்து 'பிராமணாள்' என்ற சொல்லை அழிக்கும் போராட்டத்தில் கழகத்தவரை ஏறக்குறைய 1½ ஆண்டுகள் பெரியார் ஈடுபடுத்தினார். அத்துடன், ஊரெங்கிலும் பிள்ளையார் சிலை உடைப்புப் போராட்டங்களை நடத்தினார்"[11]

என்று ஆய்ந்தோர் சொல்வதில் பொருள் இல்லாமலில்லை.

மார்வாடிகளுக்கும் குசராத்தியர்களுக்கும் எதிரான உள்ளக் குமுறல் ஒரு பதற்றமாகவும் புயலாகவும் தமிழக இளைஞர்களிடம் உருவாகி வந்த நிலையில், அதனைக் கண்டு அரண்டுபோன மார் வாடிகள் ஈ. வெ. இரா.விடம் அடைக்கலம் தேடியிருக்க வேண்டும். அண்ணாதுரையின் அரசியல் எழுச்சியை மட்டம்தட்டத் துடித்துக் கொண்டிருந்த ஈ. வெ. இரா.வின் காலடியில் மார்வாடிகள் காசைக் கொட்டியிருக்க வேண்டும்.

> "பெரியாரின் செயற்பாடுகளையும், திராவிட இயக்கத்தின் செயற்பாடுகளின் பின்னணியில் மார்வாடிகள் முழுமையாக வளர்ந்து தமிழகப் பொருளியலைத் தங்கள் முழுக் கட்டுப்பாட்டினுள் கொண்டுவந்துள்ளதையும் பார்க்கும்போது, பெரியாருக்கும் மார்வாடிகளுக்கும் இடையில் ஒரு மறைமுகத் தொடர்பு இருந்திருக்குமோ என்னும் ஐயம் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை. அவர்தம் வாழ்நாளில் ஈட்டிய 125கோடிப் பணம், எடைக்கு எடை வெள்ளிப்பணம், பண(நோட்டு) மாலைகள்,

> பெயர்வைக்கக் கட்டணம் முதலான கட்டணங்களால் மட்டும் சேர்ந்திருக்கும் என்று நம்ப முடியவில்லை"[12]

என்னும் கூற்றை ஆய்ந்து பார்க்க வேண்டும்.

அண்ணா எழுப்பிவிட்ட வடவரெதிர்ப்பு ஓர்மையிலிருந்து கழகத்தவரையும் மக்களையும் திசைதிருப்புவதற்கென்றே, ஈ. வெ. இரா.வின் பிராமணரெதிர்ப்பு மேன்மேலும் வலுத்தது.

> "பார்ப்பன-பணியா கூட்டணி தமிழகத்தைச் சுரண்டுவதாக அடிக்கடி பெரியார் சுட்டிக்காட்டியுள்ளார். ஆனால் அவர் பார்ப்பனர்களை மட்டுமே எதிர்த்துச் செயல்பட்டுள்ளார். பணியாக்கள் எனப்படும் மார்வாடிகளை எதிர்த்து அவர் துரும்பையும் அசைத்ததில்லை"[13]

என்னும் கருத்து அதனால் மிகவும் வலுவானது.

தி. மு. கழகத்தினரைக் 'கண்ணீர்த்துளிகள்' எனப் பழித்துரைத்து, அக் கழகத்தின் வளர்ச்சியைத் தடுப்பதற்கு என்றே ஈ. வெ. இரா. அவ்வப்போது பேராயக் கட்சியை மறைமுகமாகவும் நேரடியாகவும் போற்றத் தொடங்கினார். ஆனால் அண்ணாவின் தலைமையிலான தி. மு. க.வோ, திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் இரட்டைக்குழல் துப்பாக்கியெனச் சொல்லி, ஈ. வெ. இரா.வின் திராவிடர் கழக அரசியலையே கொழுக்கொம்பாய்த் தழுவி நின்றது.

அண்ணாவின் **ஆரிய மாயை**, **இலட்சிய வரலாறு** போன்ற நூல்களின் மீதான தடைகளை எதிர்த்தும், பொதுக்கூட்டங்கள் போட அக் கழகத்தின்மீது இடப்பட்ட தடைகளை எதிர்த்துமே தி. மு. கவின் தொடக்கக்காலப் போராட்டங்களெல்லாம் இருந்தன. தமிழகத்திற்கு வந்த நடுவணரசு அமைச்சர்களுக்கு எதிராகக் கறுப்புக்கொடி காட்டல்; சித்தூர் மீண்டும் தமிழகத்திற்கே சேர வேண்டுமென்ற போராட்டத்தை "மடத்தனமானது" என்று பழித்த நேரு, தமிழர்களையே இழிவுபடுத்திவிட்டார் என்று கூறி அவர் அன்று தமிழகத்திற்கு வந்தபோது கறுப்புக்கொடி காட்டுதல் போன்றனவாகவே தி. மு. கவின் போராட்டங்கள் இருந்தன. கல்லக்குடிக்கு "டால்மியாபுரம்" என்று ஒரு மார்வாடியின் பெயரைச் சூட்டியதை எதிர்த்து அந்தக் கழகம் அப்போது நடத்திய தொடர்வண்டி மறியல் போராட்டம் மட்டுமே உருப்படியான வடக்கு எதிர்ப்புப் போராட்டமாயிருந்தது.

திராவிடநாடு வேண்டும் எனக் கேட்டுப் போராடுவது என்ற அடிப்படையில், 1957ஆம் ஆண்டுத் தேர்தலில் தி. மு. க. 15 சட்டமன்றத் தொகுதிகளில் வென்றது. அதன் பின்னர், அண்ணாவின் திராவிட அரசியல்-பொருளியல் கொள்கைகளில் மிகப் பெரிய பின்னடைவு



தொடங்கியது. அதனால் 1961ஆம் ஆண்டில் தி. மு. க. வில் பிளவு ஏற்பட்டது. ஈ. வெ. கி. சம்பத் என்னும் கன்னடரின் தலைமையிலான **தமிழ்த் தேசியக் கட்சி** ஓர் இடைவேளையாக வந்தது; வந்தது, வந்த வேகத்திலேயே மறைந்தது.

1960ஆம் ஆண்டில் தில்லி ஆளவந்தார்களால் கொண்டுவரப்பட்ட பிரிவினை எதிர்ப்புச் சட்டத்தைக் கண்டு தி. மு. க. தன்னுடைய திராவிட நாடு கோரிக்கையைக் கைவிட்டது. தமிழ் மாணவரின் தேசிய எழுச்சியாக 1965ஆம் ஆண்டில் வெடித்த இந்தியெதிர்ப்புப் போராட்டத்தில் பெரிதாய் யாதொரு பங்கும் எடுக்காமலேயே அதன் பயனை மட்டும் அது முழுதுமாகத் தட்டிச் சென்றது. செத்தவனது கையில் வெற்றிலை பாக்கைக் கொடுத்தது. அதற்கடுத்து, திராவிட அரசியல் அடிப்படையில் அமைந்த ஆட்சியைத் தமிழகத்தில் முதன் முதலில் அமைத்தது.

அண்ணா முதலமைச்சரான போது, அவருக்கு முதன்முதலில் பரிவட்டத்தைக் கட்டி முதல்மதிப்பைச் செய்தது ஒரு மார்வாடி தானாம்! வடக்கெதிர்ப்புப் பொருளியல் கொள்கையை முற்றாகத் தொலைத்துவிட்டு, அம் மார்வாடிகளுடன் தி. மு. கழகம் கள்ள உறவு கொண்டுவிட்டதையே அது குறிக்கின்றது.

## முதற்கோணல், முற்றும் கோணல்!

அந்தக் கள்ளவுறவு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்துவந்தது. பணியாக்களாகிய மார்வாடி எதிர்ப்புணர்வு அறவே கொல்லப்பட்டுவிட்ட நிலையில், தமிழகமே மிகப் பாதுகாப்பான வேட்டைக்காடு என்றெண்ணிய மார்வாடிகள், அலையலையென வந்து தமிழகத்தின் சிறிய பெரிய நகரங்களிலெல்லாம் காலூன்றத் தொடங்கினர்.

ஈ. வெ. இராவின் வழிவந்த திராவிடக் கட்சிகளுக்கும் மார்வாடிகளுக்கும் இடையிலான கள்ளவுறவு இன்று ஊரறிந்த குட்டு. மக்களும் அதைக் கண்டும் காணாமல் இருக்கின்றனர்.

மார்வாடிகளுடனான கள்ளவுறவு, தமிழக மார்க்சியப் பொதுவுடைமைக் கட்சி வரையிலென்று தமிழக அரசியலோடு பின்னிப் பிணைந்து புரையோடியுள்ளது. தமிழகத்திற்குத் தன்னுரிமை கேட்கும் அரசியலணியினர், மார்வாடிகளை எதிர்க்கத் தலைப்பட்டுள்ளனர். திராவிட-மார்வாடிக் கள்ளக்காதல் அதைக் கண்டும் காணாமல் கிடக்கையில், மார்க்சியப் பொதுவுடைமைக் கட்சியின் தலைமைக்கு மட்டும் சினம் பொத்துக்கொண்டு வந்தது. அதனால், அந்தக் கட்சி ஓர் அறிக்கையை வெளியிட்டது. அந்த அரிய அறிக்கையின் வாயி

லாக அம் மார்வாடிகளும் அவர்களும் ஒரே தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் என்னும் அரிய பெரிய உண்மை வெளிப்பட்டது.

பிராமணியத்திற்கு என்றும் காவல் நிற்பதே இதுவரை அக் கட்சியின் உயிர்மூச்சென்றிருந்தது. இனிமேல் மார்வாடிகளுக்கும் கூட அவர்களே காவல்!

மார்வாடிகளுக்கும் திராவிடக் கழகங்களுக்கும் இடையிலான கள்ளவுறவு மிகவும் கமுக்கமானது; மிக மிக இறுக்கமானது; பிரிக்க வொண்ணாதது. எலிக்கும் தவளைக்கும் இடையிலான கூடாநட்பாக அது புரையோடிக் கிடக்கின்றது. தமிழ்த் தேசியம் என்னும் பருந்து வானத்தில் வட்டமிட்டாலன்றி அந்தக் கூடாநட்புக்கு முடிவேது?

## பொய் மெய்யை வெல்லுமா?

தமிழர் ஒரு தனித் தேசிய இனம் என்ற ஓர்மையை ஒழிப்பதற் கென்றே 'திராவிட' ஓர்மை என்னும் பொய்ம்மை தமிழரின் தலைமேல் சுமத்தப்பெற்றது.

> "தமிழர் என்பது **மொழிப்பெயர்**. திராவிடர் என்பது **இனப் பெயர்.** தமிழ்பேசும் மக்கள் யாவரும் தமிழர் என்ற தலைப்பில் கூட முடியும். ஆனால், தமிழ் பேசும் அத்தனை பேரும் திரா விடர் ஆகிவிட முடியாது"[14]

என்பது ஈ. வெ. இரா. 1948ஆம் ஆண்டில் வைத்த வரையறை. தமிழர் என்பது **மொழிஇனம்** என்றும், திராவிடர் என்பது **மாந்த மெய்யினம்** (Race) என்றுமே அதற்குப் பொருள். மேற்சொன்ன வரையறையினை முன்வைக்கும் அதே கட்டுரையில்,

> "ஆடையின்றிப் பிறந்தமேனியாய் நிறுத்தினால்கூட இவன் யப்பானியன், இவன் நீக்ரோ, இவன் திராவிடன், இவன் ஆரியன் என்று பிரித்துவிடலாமே! நாய்களைப் பிரிக்கவில்லையா நாம்? இது கோம்பை; இது 'புல்டாக்', இது சிப்பிப்பாறை; இஃது இராச பாளையம்; இது சீமை என்று? குதிரைகளைப் பிரிப்பதில் லையா நாம், இஃது அரபிக் குதிரை; இஃது ஆத்திரேலியாக் குதிரை; இது வேதாரணியத் தட்டு என்று? இவற்றையெல்லாம் பிரிக்கும்போது மக்களைத்தானா பிரிக்க முடியாது? இது போகட்டுமே! நாம் பிறப்பைப் பார்த்து இனப்பிரிவினை செய் யும்படி கேட்கவில்லையே! அவர்கள் கொண்டாடும் உரிமை களைக் கொண்டுதானே பிரிக்கும்படி சொல்கிறோம்!"[15]

என்ற ஈ. வெ. இரா.வின் கூற்றுப்படி, ஒரு தனி மெய்யினமாகவே 'திரா விடர்' என்பவரை அவர் பார்த்துள்ளார். அந்த மெய்யினக் கூறுடனே



'கொண்டாடும் உரிமை' எனப்படுகிற சாதி-வண்ணத் தகுதியையும் அவர் இணைத்துள்ளார்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம்முதல், ஒடுக்குண்ட மொழிவழித் தேசிய இனங்களின் போராட்டங்கள் உலகெல்லாம் வெடித்தன. அக்கால வந்தேறி வல்லரசுகளுக்கு எதிரான தேசியப் போராட்ட வடிவங்களாக அந்தப் போராட்டங்கள் வளர்ந்துவந்த நிலையில், ஈ.வெ.இரா. புகுத்திய திராவிட மெய்யினப் பார்வையானது தேசிய இனங்களின் எழுச்சிகளுக்கும் இலக்கணங்களுக்கும் எதிரான தாகவே இருந்தது. ஈ. வெ. இரா. இதைக் காணத் தவறினார் என்று சொல்லிவிட முடியாது. ஏனெனில், ஒரு தனிநாடாக அமையத்தக்க ஒரு தனி மொழிவழித் தேசிய இனமே தமிழரினம் என்னும் இயல்பான வரலாற்றுப் போக்கை — அதாவது, தமிழ்த் தேசிய ஓர்மையை — கருவிலேயே குலைப்பதில் ஈ. வெ. இரா. முழு மூச்சாயிருந்தார்.

இந்தத் துணைக்கண்டத்து வரலாறெல்லாம் ஆரியர்-திராவிடர் மெய்யினப் (Racial) போராட்டத்தின் வரலாறே எனக் கருதிய ஈ. வெ. இரா., மொழி வழித் தேசிய இனங்களுக்கு இடையிலான போராட் டங்கள் என்று யாதுமில்லை என்றார்.

> "இந்த நாட்டைப் பொறுத்தவரையில், இதுவரை இருந்துவரு கின்ற போராட்டமெல்லாம் ஆரியர்-திராவிடர் போராட்டமே யொழிய, வடமொழி-தென்மொழிப் போராட்டமல்லவே! இதற்கு எவ்வளவோ சான்றுகளைக் காட்டலாமே!"[16]

என்னும் ஈ. வெ. இரா.வின் வரிகளின் வாயிலாக அது வெளிப்படு கின்றது. தம்முடைய 'திராவிட' மெய்யினப் பார்வையை நிலைநிறுத்து வதற் கென்றே அவர் அவ்வாறு கூறிவந்தார். மொழியைக் கெடுத்ததே ஆரியரின் முதல்வேலையாயிருந்தது என்னும் போங்கில் அதே கட்டு ரையில்,

> "அதாவது, முதலில் மொழியில்தான் அகத்தியன் கை வைத் தான். மொழியை ஒழிக்கும் வேலைதான் அவர்களின் முதல் வேலை. இதுதான் அவர்களின் நடைமுறைப் பழக்கம்"[17]

என்று ஈ. வெ. இரா. சொல்வது முன்னுக்குப்பின் முரணானது.

இன்றைய நடப்பை வைத்துப் பார்த்தால், கன்னடன் தமிழை வேம்பாக வெறுப்பது தேசிய இனப்பகையின் (முரண்பாட்டின்) வெளிப்பாடன்றோ? இந்தித் திணிப்பை முழு மனத்தோடு ஏற்றுக் கொண்டு தமிழை மட்டுமே நஞ்சென வெறுக்கும் ஆந்திரத் தெலுங் கர்கள், கருநாடகத் தெலுங்கர்கள், கன்னடர்கள், மலையாளிகள் ஆகிய திராவிடரின் போக்கும் நோக்கும் தேசிய இன முரண்பாடுகளால்

வந்தவைதானே? மொழிவழித் தேசிய இனங்கள் என்னும் இக்காலத்து மெய்ம்மைகளைப் புறக்கணித்துவிட்டு, மெய்யின (race) வழியில் மக்கள் பிரிவுகளை விளக்குவது அறிவியலுக்கும் நடப்புக்கும் பொருந்தாது.

கொடியும் கொற்றமுமாய் மண்ணாண்ட பண்டைத் தமிழ்ப் பேரரசுகள் வீழவும், தமிழ் தாழவும், தமிழரினம் அடிமைப்படவும் பெருங்காரணமாயிருந்த 'திராவிடர்'களின் நலன்களையே முன் வைத்து உருவாக்கப்பட்ட திராவிட மெய்யினக் கொள்கை ஒரு பொய் மான் என்று ஓர்ந்துணர்ந்து, தமிழிளைஞர்கள் போர்க்கோலம் பூண்டா லன்றித் தமிழரினத்திற்கு வாழ்வில்லை; வழியில்லை; வருங்காலமு மில்லை.

## பிராமணரும் தமிழ்த் தேசியமும்

தமிழகத்தின் வந்தேறி ஆண்டைகளாக விளங்கிய கன்னடரும் தெலுங்கரும் மராட்டியரும் வடுகப் பிராமணியத்தை உச்சிமேல் வைத்துப் போற்றி வந்தனர். பிராமணரின் ஆளுமையின் கீழான கோயில்களை மையமாக வைத்து ஆண்டுவந்த வந்தேறிகளெல்லாம், தமிழ் மொழியும் தமிழ்ப் பண்பாடும் சங்கதமொழியிலிருந்தே தோன் றினவெனப் பாடம் படித்தனர்.

இதற்கு நேரெதிராக, ஆழ்வார்களின் மாலியம் (வைணவம்) தமி ழுக்கு முதலிடம் கொடுத்தது. ஆழ்வார்களில் சிலர் பழந்தமிழரான மறையர்குடியிலிருந்தும் கள்ளர்குடியிலிருந்தும் தோன்றியவர்களா யிருந்ததே அதற்கான தனிப்பெரும் காரணம். ஆழ்வார்களே இன்றைய தனித்தமிழ் இயக்கத்தின் முன்னோடிகள். இந் நிலை வேதாந்த தேசிக னுக்குப்பின் தலைகீழாகியது. சிவனியமும் தமிழுக்கு நல்ல இடத்தைக் கொடுத்தது.

பல்லவரும் சேரரும் சோழரும் பாண்டியரும் வடக்கிலிருந்து பிராமணர்கள் பலரை இறக்குமதி செய்து, அவர்களைப் பேணிட வென்றே பல பிரமதாயங்களையும் சதுர்வேதிமங்கலங்களையும் உரு வாக்கியபோது, தமிழரல்லாப் பிராமணரின் எண்ணிக்கையும் செல் வாக்கும் பெருகின. ஆயினும், வந்தேறிய பிராமணருக்கும் தமிழ்ப் பிராமணருக்கும் இடையில் முரண்பாடுகள் இருக்கவே செய்தன.

போதாமைக்கு ஆழ்வார்களின் நெறியினைப் பிராமணியமய மாக்கிய இராமானுசர், கீழ்ச்சாதியினர் பலருக்குப் பூணூல் மாட்டி அவர்களைப் பிராமணராக்கினார். அவர்களும் தென்கலை ஐயங்கார் களாயினர். இராமானுசர், ஒரு தெலுங்கர். தமிழரிடமிருந்த மாலியத் தலைமை மெல்ல வடுகமயமானதையே இது காட்டும்.



ஆயினும், தமிழகத்தில் பூசைச் சடங்குகளைச் செய்துவருகின்ற பிராமணரில் பெரும்பாலோர் தெலுங்குப் பிராமணராக இருப்பதும் கண்கூடு. இந்த வடுகப் பிராமணரே இன்று ஆர். எஸ். எஸ்., இந்து முன்னணி, உலக இந்துக் கழகம் (விசுவ இந்து பரிசத்) முதலான இந்து வெறி இயக்கங்களின் உடலாகவும் உயிராகவும் இருந்துவருவதொரு கண்கூடான உண்மை.

காஞ்சி மடத்தை ஆதிசங்கரர் ஏற்படுத்தவில்லை யென்பதால், அதைத் 'திருட்டு மடம்' என்பதுண்டு. அந்தத் 'திருட்டு மடத்'திற்கு ஒரு கன்னடப் பிராமணனோ தெலுங்குப் பிராமணனோதான் தலை வனாக முடியுமேயன்றி, தமிழ்ப் பிராமணன் ஒருவனால் அதன் தலை வனாக முடியாது.

தமிழர்களிடம் பிராமணர் எதிர்ப்பு இயக்கத்தைக் கட்டிய ஈ. வெ. இராவுக்கும் தமிழகத்தில் பிராமணர்களுக்குத் தலைமை தந்துவந்த காஞ்சி காமகோடி மடத்தின் தலைவராய் இருந்த சந்திர சேகரேந்திர சரசுவதிக்கும் இடையில் ஒரு பெரிய ஒற்றுமையுண்டு. இருவருமே கன்னடர்கள். முன்னவர் தமிழைக் "காட்டுமிராண்டி மொழி" என்றா ரெனின், பின்னவரோ அதை "நீசபாசை" என்று பழித்தவர்.

இந் நிலையில், தமிழ்ப் பிராமணர்களில் மிகச் சிலர் தங்களின் தமிழ்த் தன்மையை முற்றும் இழக்காமல் தனித்தே நின்றனர்; சங்கத மொழிக்கு முதலிடம் தந்த பிராமணரில் பெரும்பான்மையரின் எதிர் மறைப் போக்குக்கு நேரெதிரான நிலையெடுத்தனர். பாண்டித்துரைத் தேவர் நிறுவிய தமிழ்ச் சங்கத்தின் வாயிலாக ஆய்வுகள் பல நடத்தித் தமிழுக்குச் சிறப்புச் செய்தவர்கள் அவர்களில் சிலராவர்.[18] மு. இராக வையங்கார், இரா. இராகவையங்கார், எசு. கிருஷ்ணசாமி ஐயங்கார், (தமிழர்கள் தென்னாட்டுப் பழங்குடி மக்களே என்று மறுக்கொணாச் சான்றுகளைக் காட்டி மெய்ப்பித்த) பி. டி. சீனிவாசையங்கார், (தமிழ ரின் தென்னாட்டுப் பழங்குடிமையையும் தமிழின் பெருமையையும் தக்க சான்றுகள் காட்டி எடுத்துரைத்த) சேச ஐயங்கார், வி. ஆர். இராமச் சந்திர தீட்சிதர், (தமிழ்மொழியும் வடமொழியும் வெவ்வேறென்று அடித்துச் சொல்லிய) பரிதிமாற் கலைஞர் என்னும் சூரியநாராயண சாத்திரியார் ஆகியோர் அவர்களில் சிலராவர்.

தமிழகத்தில் கிடைத்த கல்வெட்டுகளில் பெரும்பான்மைக் கல்வெட்டுகள் பாகத (பிராகிருத) மொழியிலானவை என்று வடக் கத்திய சார்பினர் பிதற்றிவந்த நிலையில், அவற்றில் மிகப் பெரும்பான் மையானவை தமிழ்க் கல்வெட்டுகளே என்ற உண்மையை உலகுக்கு உணர்த்திய கே. வி. சுப்பிரமணிய ஐயரின் அரும்பணியைக் குறைத்து மதிப்பிடலாமோ?

கிடைத்தற்கரிய பெருஞ்செல்வமாக இன்று நாம் கருதுகின்ற பண்டைத் தமிழ்நூல் சுவடிகள் பலவற்றைத் தேடித்தேடிக் கண்டு பிடித்துக் கொடுத்த உ. வே. சாமிநாதய்யரைப்பற்றி நம் பாவாணர்,

> "காவிரி வாய்ப்படவும் கறையான் வாய்ப்படவு மிருந்த கடைக் கழக நூல் ஏட்டுச்சுவடிகளை ஊரூராகவும் தெருத் தெருவாக வும் வீடுவீடாகவும் திரிந்து தேடியும், விறகுத்தலையன்போல் தலையிற் சுமந்து கொணர்ந்தும், அல்லும் பகலும் கண்பார்வை கெடக் கூர்ந்து நோக்கிப் படித்தும், அரிய ஆராய்ச்சிக் குறிப்பு களும் ஒப்புமைப் பகுதிகளும் வரைந்தும், ஆராய்ச்சியாளர்க்குப் பேருதவியாகவும், பிறர்க்குப் பெரும் பயன்படவும் வெளியிட் டவர், தென்கலைச்செல்வர் பெரும் பேராசிரியர், பண்டாரகர், உ. வே. சாமிநாதய்யரே"[19]

எனச் சொல்லி வாயாரப் புகழ்ந்தார்.

தொடக்கத்தில் தமிழ்த் தேசிய ஓர்மைக்குப் பள்ளுப் பாடிய சி. சுப்பிரமணிய பாரதியார், "**தமிழைக் காப்பாற்றுங்கள் !**"[20] என்று தொடர்ந்து அறைகூவல் விடுத்தவண்ணம் தனித்தமிழில் எழுதுமாறு தூண்டிவந்த சுப்பிரமணிய சிவா முதலான தமிழ்ப் பிராமணர்களும் அவ்வாறே செயல்பட்டனர். இதனால் தமிழ்த் தேசிய ஓர்மைக்கு அடியெடுத்துக் கொடுத்தவர்களில் தமிழ்ப் பிராமணர் சிலருமாவர் என்பதும் உண்மை.

ஆனால், கர்னல் எச். எசு. ஆல்காட், பிளாவாட்சுக்கி அம்மை யார் ஆகிய இரு அமெரிக்கர்களால் 1875ஆம் ஆண்டில் நியூயார்க்கில் தோற்றுவிக்கப்பட்ட **இறைநெறிக் கழகம்** (Theosophical Society) ஆரியக் கூத்தாடிக்கொண்டு தமிழகத்திற்கு வந்து கடைவிரித்தது. ஆரியக் கழகமும் பிரமக் கழகமும் (ஆரிய சமாசமும் பிரம சமாசமும்) தமிழகத் திற்குள் ஊடுருவின. பின்னர், அத் தமிழ்ப் பிராமணரிடம் தமிழ்த் தேசிய சார்புநிலை மறைந்தது; தமிழ்ப் பிராமணரெல்லாரும் தங்களை 'ஆரியர்' என்றே நம்பிக் கெடலாயினர். வழியும் தெரியாது, வரலாறும் தெரியாது, தமிழரினத்திடமிருந்தே அயன்மையாகி அவர்கள் வேரற்று நிற்கின்றனர். அத்துடன், ஈ. வெ. இராவின் 'திராவிடக்' கொள்கையும் பிராமணரெதிர்ப்பும் சேர்ந்து அவர்களை மீளமுடியாப் படுகுழியில் தள்ளியுள்ளன.

இதனால், அத் தமிழ்ப் பிராமணர்கள் மீண்டும் தமிழ்த் தேசியத் தின்பால் திரும்புவதென்பது குதிரைக் கொம்பு. தமிழ்ப் பிராமணர்கள் இன்று யாதொரு தமிழ்ப்பற்றுமின்றி, தமிழ்மண்ணின்மீது பற்றின்றி, தமிழினத்தின் எதிரிகளாகவே நின்று பேசியும் எழுதியும் மேன்மேலும் கெட்டுவருகின்றனர்.



தமிழ்ப் பிராமணர்களில் சிலரும்கூடத் தொடக்கத்தில் தமிழ்த் தேசியத்திற்கு வித்திட்டனர் என்று கூறுவதால், தமிழ்த் தேசியமே பிராமணியச் சார்புடைய தென்றாகாது. உள்ளீட்டில், பிராமணியம் என்ற மாந்தநேயத்திற் கொவ்வாச் சாதி ஒதுக்க (Caste Apartheid) நெறி களுக்கு முரணானது தமிழ்த் தேசியம். கருத்தளவிலும் கொள்கையள விலும் தமிழக விடுதலைக் கொள்கைக்கு நல்ல காவலராகவும் தலை மக்களாகவும் இருந்து வருபவர்கள் அப் பிராமணியத்துடன் எள்ளள வும் ஒத்துப்போகாத மறையர் என்ற பழந்தமிழராய் இருப்பதே சென்ற நூறாண்டின் வரலாறு. வறட்டுத்தனமான பிராமணப் பூச்சாண்டி காட்டி அதை மறைக்கவோ மறுக்கவோ முடியாது.

## அக்கரைப் பாகலுக்கு இக்கரைக் கொழுக்கொம்பு

திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றுவதற்கு முன்பு ஈ. வெ. இரா. நடத்திய கிளர்ச்சிகளெல்லாம் இந்தியை எதிர்ப்பனவாகவே இருந்தன. ஆனால், தமிழைக் கல்விமொழியாகவோ ஆட்சிமொழி யாகவோ வழக்குமன்ற மொழியாகவோ செய்து, அத் தமிழை ஆட்சிக் கட்டிலில் ஏற்றுவதற்காக நடந்த போராட்டங்களாக அவரது இந்தி யெதிர்ப்பு என்றுமே இருந்ததில்லை. அவர் அதை என்றுமே மறைத் ததுமில்லை.

1938ஆம் ஆண்டில் ஒருமுறை என்றும், 1950களில் மறுமுறை என்றும் ஈ. வெ. இரா. எழுப்பிய 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்னும் முழக்கம், தமிழரினத்தின் தேசிய இனவிடுதலைக்காக எழுப்பப்பட்ட முழக்கம் அன்று. அவரது அரசியல் தேவைகளுக்காக ஓர் அரசியல் உத்தியாக மட்டும் எழுப்பப்பட்டதே அவரது தமிழ்நாடு பிரிவினைக் கோரிக்கை. அதற்காக அவர் என்றுமே போராடத் துணிந்ததுமில்லை. அரசிடம் பூச்சாண்டி காட்ட மட்டுமே தேவைப்படும் போதெல்லாம் அவர் அந்த முழக்கத்தை எழுப்பிவந்தார்.

> **விடுதலை**யில் 1965 மார்ச் 3 அன்று எழுதிய ஆசிரிய உரையில், "நீதானே முன்பு இந்தியை எதிர்த்தாய்? இப்போது ஏன் இப்படிச் சொல்கிறாய்?' என்று கேட்பீர்களானால், சொல்கிறேன். இப் போதும் நான் இந்தியை எதிர்க்கத்தான் செய்கிறேன். ஆனால், நீங்கள் சொல்வதுபோல் தமிழ் கெட்டுவிடுமே என்று அல்ல. இனிமேல் கெடத் தமிழில் என்ன மிச்சம் இருக்கிறது? ஆனால் நமக்கு ஆங்கில அறிவு தேவை யென்பதால், இந்தியை எதிர்க் கிறேன்! **இந்தி எதிர்ப்பு மொழிச் சிக்கல் அல்ல; அரசியல் சிக்கல்தான் !**"[21]

என்று பெரியார் திருவாய் மலர்ந்தருளியதே அதை மெய்ப்பிக்கின்றது. அடிமனத்தில் தமிழ் எதிர்ப்பையும் தமிழரின எதிர்ப்பையும் பொதித்து வைத்திருந்த பெரியார், தமிழர்களை வைத்து எவ்வளவு பெரிய அரசிய லாடியுள்ளார்!

பெரியார் இந்தியை எதிர்த்ததும், 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று முழங்கியதும், உண்மையில் தமிழைக் காக்கவும் தமிழக விடுதலைக் காகப் போராடுவதற்கும் அல்லவென்பது உள்ளங்கை நெல்லிக்கனி. தம்முடைய சொந்த அரசியல் நலன்களுக்காக மட்டுமே அவற்றை அவர் பயன்படுத்திக்கொண்டார். அன்று தமிழிளைஞரிடம் கால் கொண்டு வந்த தமிழ்த் தேசிய ஓர்மையை ஒரு நல்ல கருவியாக்கிக் கொண்டு அரசியல் நடத்தவே அவர் அவ்வாறு செய்தார் என்பதற்கு இதைவிடப் பெரிய சான்று வேண்டுமோ? **குடி அரசு** ஏட்டில் **இந்திப் புரட்டு** என்ற தலைப்பில் 20.1.1929 அன்று பெரியார் எழுதிய ஆசிரிய வுரையில்,

> "இந்தியாவுக்கு ஒரு பொதுமொழி வேண்டுமானாலும்—அல்லது வணிகத்திற்கு ஒரு பொதுமொழி வேண்டுமானாலும், ஆங்கில மொழியைத் தேர்ந்தெடுத்து அதை எல்லா மக்களிடையிலும் பரப்ப முயற்சிக்க வேண்டுமேயன்றி, வேறு மொழியைப்பற்றி எண்ணுவது முட்டாள்தனமோ சூழ்ச்சியோதான் ஆகும்"[22]

என்றெழுதியதைக் காண்க. அதே ஆசிரியவுரையில்,

> "........தமிழ்ப் படிப்பதனாலாவது, தமிழ்த்தாய்ப் பற்றினாலாவது மனிதனுக்குத் தன்மான உணர்ச்சியும் பகுத்தறிவு உணர்ச்சியும் வருமா என்று அய்யப்பட வேண்டியிருக்கிறது"[23]

என்றும் எழுதியது, ஈ. வெ. இரா. இன்தமிழை அரியணையில் ஏற்ற வேண்டி இந்தியை எதிர்க்கவேயில்லை என்பதை மிகத் தெளிவாகக் காட்டுவன.

இராசகோபாலாச்சாரியாரையும் மற்ற பிராமணர்களையும் எதிர்ப்பதற்கும், அன்றைய ஆங்கிலேயர் ஆட்சியின் ஆண்டைமொழிக் கொள்கைக்கு நல்ல உறுதுணையாக நிற்பதற்கும் என்றே அப் பெரியார் இந்தியை எதிர்க்க முற்பட்டார்.

ஈ. வெ. இராமசாமி நாயக்கர் 14.8.1948 அன்று சென்னையில் ஆற்றிய ஓர் உரையில்,

> "காலையில் நான் இம் மாநாட்டுத் தலைவரை ஆதரித்துப் பேசும் போது, 'தமிழைவிட ஆங்கிலத்தைக் கட்டாயப் பாடமாக்கி னால், அதற்கு வாக்களிப்பேன்' என்று கூறினேன்"[24]

எனச் சொன்னதையும் பார்க்க.



## இக்கரை மாட்டுக்கு அக்கரை பச்சை!

தம்முடைய பிராமண எதிர்ப்பு அரசியலின் காரணமாக, ஈ. வெ. இரா. முதலில் தமிழையும் தமிழ் இலக்கியத்தையும் பற்றி மிக மட்டமாக எண்ணிவந்தார். தமிழும் தமிழ் இலக்கியமும் மதத்துட னும் மூடநம்பிக்கையுடனும் ஒன்றியைந்து வந்துள்ளதாகக் கருதி வந்தார். கடைக்கழக இலக்கியத்தில் பெரும்பகுதி அக, புற வழியிலான சமயஞ்சாரா (secular) இலக்கியமாகவே இருந்துவந்துள்ளதை ஈ. வெ. இராசாமி நாயக்கர் கருத்தில் கொள்ளவில்லை. இறைப்பற்று (பத்தி) இலக்கியத்தினால் வந்த சமய இலக்கியமே தமிழிலக்கியம் என்று கருதிவந்தார்.

அதனால், தமிழிலக்கியத்தைப் பெரியார் தொடர்ந்து தூற்றி வந்தார். ஆனால், **எட்டுத்தொகை, பத்துப்பாட்டு** ஆகிய கடைக்கழக இலக்கியங்களில் சமயத்தின் தாக்கங்கள் மிக மிகக் குறைவு. உள்ள படியே, ஈ. வெ. இரா. வாயாரப் புகழ்ந்து போற்றிய புத்தமும் அருகமு மாகிய ஆரிய மதங்கள் தமிழகத்திற்குள் ஊடுருவிய பின்னரே, அது வரை சமயஞ்சாரா இலக்கியமாயிருந்த தமிழிலக்கியத்தில் சமய இலக் கியங்கள் தோன்றலாயின; பின்னர்ப் பெருகி மேலாண்மை பெற்றன.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் படைத்த மாலிய, சிவனிய இலக்கியங்கள் உள்ளபடியே புத்த, அருக சமய இலக்கியங்களின் தொடர்ச்சியும் மறுப்புமேயல்லாமல் வேறில்லை. புத்த மதம் தென் னகத்தில் தோன்றிய பிராமணியத்தை எதிர்த்தது. ஆனால் புத்தரையே 'ஆரியர்' என்று அழைத்துச் சொந்தம் கொண்டாடிப் பெருமைப்பட்டுக் கொண்டது.

கிரேக்கம், இலத்தீன், அரபு, சீனம் முதலான பண்டைய மொழி களில் சமய இலக்கியங்கள் இல்லவே இல்லையா? ஆங்கிலம், பிரெஞ்சு, எசுபானியம், செருமானியம், யப்பானியம் ஆகிய அறிவியல் வளர்ந்த எந்த மொழியில்தான் அத்தகைய சமய இலக்கியம் இல்லை? முதலா ளியப் புரட்சிகளுக்குப் பின்னர்தானே அம் மொழிகளில் எல்லாம் சமயஞ்சாரா இலக்கியங்கள் தோன்றலாயின? அந்த மொழிகளைச் சேர்ந்த இனங்கள் உலகநாடுகளைப் பிடித்து வந்தேறி வல்லரசுகளான தால்தானே அவற்றில் தற்கால அறிவியல் ஆய்வுகளும் இலக்கியங் களும் வந்தன? கன்னடனுக்கும் தெலுங்கனுக்கும் அடிமைப்படாமல் இருந்திருந்தால், தமிழரும் உலகாள்பவராக நீடித்துத் தமிழையும் ஓர் ஆண்டை மொழியாக்கி அதேபோன்ற ஒரு தகுதியை எய்தியிருக்க மாட்டாரோ? அடிமையுண்ட ஓர் இனத்திற்கு அது போன்ற வாய்ப்பு ஏது?

தொல்இலக்கியம் என்பதும், செம்மை இலக்கியம் என்பதும் ஓர் இனத்தினுடைய பழைய அடிச்சுவடுகளைக் காட்டும் வரலாற்றுப் பெட்டகங்கள். இந் நிலையில், தற்கால அறிவியல் நெறிகளையும் இலக்கணங்களையும் கொண்டுபோய் முற்கால இலக்கியங்களோடு ஒப்பிட்டு அவற்றை எடுத்தெறிந்து பேசுவது இடத்தையும் பொழுதை யும் அறியாத இயங்காவியல் கூற்றாகும். அரிய பல தமிழ் நூல்களை ஆடிப்பெருக்கில் எறிந்தும், அரிய பல ஓலைச்சுவடிகளைப் பிணத் தோடுகூடப் போட்டுப் புதைத்தும் கொளுத்தியும் ஊழிக்கூத்தாடிய பிராமணியத்திற்கும் தமிழிலக்கியங்களைச் சிறுமைப்படுத்தி எடுத் தெறிந்து பேசும் பெரியாரியத்திற்கும் இடையிலான வேற்றுமைதான் என்ன?

அவ் விரண்டுமே தமிழரினத்தின் வரலாற்றை அழிக்கப் பார்க் கின்ற அழிம்புப் போக்குகள்தானே?

“காட்டுமிராண்டிக் காலத்து மொழி”[25] என்று தமிழை வாய்க் கூசாமல் பழித்தவர்தானே ஈ.வெ.இரா.? ஈ.வெ.கி.சம்பத் நடத்திவந்த தமிழ்ச் செய்தி ஏட்டின் பொங்கல் மலரில்,

> “தமிழ் ஒரு மதிக்குழப்பம் (நியூசென்சு)! தமிழ்ப் புலவர்கள் யாவ ரும் குமுக எதிரிகள்”[26]

என்று தூற்றியவர்தானே அந்தக் கன்னடப் பெரியார்? **“சனியனான தமிழுக்கு”**[27] என்று சொல்லித்தானே அவர் தமிழைப் பழித்தார்?

திருமலை நாயக்கன், ஒரு மிகப் பெரிய தெலுங்குவெறியன். அவன் தமிழையும் தமிழ்ப் புலவர்களையும் என்றும் போற்றியதில்லை. அத் தெலுங்கு வந்தேறியின்மீது **திருமலை நாயக்கர் காதல்** என்னும் நூலை இயற்றிய ஒரு தமிழ்ப் புலவர், அந் நூலை அவனுடைய அரச வையில் அரங்கேற்றினார். அத் தமிழ்ப் புலவர் அவன்மீது பாடியதை விளங்கிக் கொள்ளாத அந்த வடுக நாயக்கன், “அரவம் அத்வானம்” என்றானாம்.

ஈ.வெ.இரா.வும் தமிழைக் “காட்டுமிராண்டி மொழி” என்று பழித்ததும்—தொடர்ச்சியாக அவர் காட்டிவந்த தமிழெதிர்ப்பும்— அவ் வடுக நாயக்கரின் மரபில் வந்தவை போலும். திருமலை நாயக்க னின் மீதான “திருமலை நாயக்கர் காதல்” என்ற அந்நூலின் பெயரைப் பின்னர் **கூளப்ப நாயக்கன் காதல்** என்று மாற்றிய சுப்பிரதீபக் கவி ராயர்,

> **சந்தியிலே மாமியிட்ட சண்டையிலே**
> **வந்தொரு தொந்தி வடுகன் சுகிப்பானோ ?**[28]

என்று சினந்து பாடியதுதான் இங்கு நினைவுக்கு வருகிறது.



அப்படி இருந்தும், அண்ணாவின் தலைமையிலான திராவிட முன்னேற்றக் கழகத்தினால் உரைநடைத் தமிழுக்கு ஏற்பட்ட நல்ல வளர்ச்சியின் வழிநின்ற தமிழ்த் தேசிய ஓர்மையினால் உருவாக்கப் பெற்ற பகுத்தறிவுசார்ந்த நல்ல தமிழாசிரியர்களும் தமிழறிஞர்களும் தமிழினப் பற்றுள்ள இளைஞர்களும் மளமளவென்று பெருகினர். மறைமலையடிகள், பாவாணர் முதலியோரின் ஆய்வுகள் அவர்களைக் கவர்ந்தன. தமிழர் வரலாற்றைப் பற்றிய புத்தம் புதிய ஆய்வுகளும் வந்த வண்ணமிருந்தன. இவையெலாம் ஈ.வெ.இரா.வின்மீது ஓரளவு தாக்கத்தை ஏற்படுத்தவே செய்தன. தமிழை மிகவும் தாழ்வான மொழி எனக் கருதிவந்த ஈ.வெ.இரா., தமிழின் சிறப்பையும் தமிழரின் பெருமை யையும் பற்றி ஓரளவுக்குப் புரிந்துகொண்டார். ஆயினும், வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தின்மேல் ஏறிக்கொண்டதைப்போல் தமி ழெதிர்ப்புக் கருத்துகளை அவர் அவ்வப்போது உதிர்த்தே வந்தார்.

## இடிக்குக் குடை பிடிக்கலாமோ?

1938ஆம் ஆண்டில் இராசாசி அன்றைய சென்னை மாகாணத் தில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கினார். அதை எதிர்த்துக் களம் கண்ட ஈ.வெ.இரா.வின் இந்தியெதிர்ப்பு, ஆங்கிலத்திற்குச் சார்பான இந்தியெதிர்ப்பேயாகும். இந் நிலையில், 1965ஆம் ஆண்டு சனவரி 26 முதல் இந்தியே ஆட்சிமொழியென இந்தி(ய) வல்லரசு ஆணை யிட்டபோது எம் தமிழகத்தில் வெடித்த வரலாறு காணாத மொழிப் போராட்டம், ஒரு மாபெரும் தமிழ்த் தேசிய எழுச்சியானது.

என்றுமே ஆங்கிலத்திற்கு ஆதரவாக நின்று இந்தியை எதிர்ப் பது என்னும் பழைய திராவிடர் கழக நிலைப்பாட்டிலிருந்து முற் றிலும் மாறுபட்டுத் தமிழுக்கென்று — தமிழ்ச் சார்பாக — நடத்தப் பெற்ற 1965 இந்தியெதிர்ப்புப் போராட்டம், தமிழ்த் தேசியத்தின் தனி வளர்ச்சியில் ஓர் எல்லைக்கல்லாகும். தமிழகம் அதுவரை கண்ட போலி இந்தியெதிர்ப்பிலிருந்து இயல்பால் மாறுபட்டுத் தமிழ்த் தேசியம் போர்முரசு கொட்டி எக்காளமிட்டு எழுந்த மாபெரும் வர லாற்று நிகழ்வு அஃதாகும்.

1965 மொழிப் போராட்டத்தைக் கண்டு ஈ.வெ.இரா. அரண் டார். ‘பேராயக் கட்சியை ஒழிப்பதும், காந்தியாரை ஒழிப்பதுமே தம் முதல் வேலை’ எனச் சூளுரைத்து நின்ற ஈ.வெ.இரா., அன்று தமிழகத் தில் செத்துக்கொண்டிருந்த பேராயக் கட்சிக்கு முட்டுத்தாங்குவதே தலைமேல்கொண்ட கடன் என்று விரைந்து செயல்பட்டார். “இந்தி எதிர்ப்பன்று; பேராயக் கட்சி எதிர்ப்பே!”[29] என்று கூறி அப் போராட் டத்தைத் தூற்றி **விடுதலை**யில் எழுதினார்.

> “இந்தியைத் திணிப்பதில்லை என்று அன்றே காமராசர் எனக்கு எழுதித் தந்திருக்கிறாரே! அந்த உறுதிமொழியை அரசினரும் மீறாதபோது, ஏன் கிளர்ச்சி செய்ய வேண்டும்? பதவியைப் பிடிப்பதற்காகக் கண்ணீர்த்துளிகள் செத்த பாம்பை எடுத்து ஆட்டுகின்றனர்”[30]

என்றெலாம் 1965 சனவரி 19 அன்று அரகண்டநல்லூரில் பேசினார். வெறும் வாயை மென்றுகொண்டிருக்கச் சொல்லித் தமிழருக்கு அவர் இந்தப் பொல்லா அறிவுரையை வழங்கினார்.

ஆயினும், வரலாற்றுச் சிறப்புமிக்க அந்த இந்தியெதிப்புப் போராட்டம் வெடித்துவிட்டது! தி.மு.க. தலைவர்கள் தளைப்படுத் தப்பட்டனர். அரசு மிகப் பெரிய அடக்குமுறையை ஏவிவிட்டது. இந்தி(ய) வன்படைகள் தமிழரினத்தின்மேல் மிகப் பெரிய இனப் போரைத் தொடுத்தன. இந் நிலையில், **அடக்குமுறைதான் ஆட்சிக் குலைப்புக்கு(அராசகத்திற்கு)த் தீர்வு** என்னும் தலைப்பிலமைந்த **விடுதலை** ஆசிரியவுரையில்,

> “அடக்குமுறையில்லாத ஆட்சி அநாகரிக ஆட்சியே (Anarchism) ஆகும். சனவரி 26 அன்று கண்ணீர்த்துளிகளைப் பொருட்படுத் தாமல் விட்டுவிடுங்கள் என அரசுக்குச் சொன்னேன். இல்லா விட்டால் கடினமான அடக்குமுறை நடவடிக்கைகளை மேற் கொள்ளச் சொன்னேன். அவ்விரண்டையும் செய்யவில்லை. தேர்தலைப்பற்றி இப்போதே கவலைப்பட வேண்டாம். சுதந் திரக் கட்சி, கண்ணீர்த்துளிக் கட்சி ஆகிய இரண்டையும் சட் டத்திற்கு எதிரானவை என்று தடைசெய்யுங்கள்! தாளிகை களுக்கு வாய்ப்பூட்டுச் சட்டம் போடுங்கள்!”[31]

என்றெல்லாம் வரன்முறையின்றி எழுதிய வடுகப் பெரியார் அந்தத் தமிழ்த் தேசிய இயக்கத்தை அழிக்கப் பார்த்தார்.

தமிழ் மாணவரின் பேரெழுச்சியைக் கண்டு திராவிட முன் னேற்றக் கழகத்தின் தலைமை அரண்டுபோனது. அந்தக் கழகமும் ஆங்கிலத்திற்காக வரிந்து கட்டிக்கொண்டு நின்றதே யன்றித் தமிழுக் காக அல்லவே!

இந் நிலையில், அம் மாபெரும் மொழிப்போரில் பெரிதாகப் பங்கெடுக்காமல் திராவிட முன்னேற்றக் கழகம் மெதுவாக ஒதுங்கியே நின்றது.

அண்ணா தம்முடைய உண்மை உருவத்தைக் காட்டிவிட்டார்! அம் மொழிப்போருடன் “ஒட்டுமில்லை, உறவுமில்லை!” என அறிக்கை விடுத்துத் தி. மு. க.வின் கயமைக்குக் கட்டியம் கூறினார். மொழிப்



போராட்டத்தைக் கைவிடுமாறு 10.2.1965 அன்று மாணவர்களுக்கு ஓர் அறைகூவல் விடுத்தார். அதைக் கண்டு ஈ. வெ. இரா., “பூனை கோணியிலிருந்து வெளிவந்துவிட்டது!”[32]என்று சொல்லி நகையாடி னார்.

இந்தி(ய) அரசு ஏவிவிட்டிருந்த வன்படை 1965 பெப்ரவரி 12 அன்று தமிழர்மீது சுட்டுக் கொலைவெறியாடியது. தமிழகமே கொந் தளித்தது! தமிழரின் மொழிப்போர் வீறுகொண்டது. தில்லி ஆளவந் தார்கள் அடுத்தடுத்துக் கட்டவிழ்த்துவிட்ட மட்டுமீறிய இனவன் முறையால் தமிழரின் இனவெழுச்சியை அடக்க முடியவில்லை. இந்தி வெறி வல்லரசு ஆடிய வெறியாட்டில் எண்ணரிய இன்தமிழ் உயிர்கள் அறுவடையாயின.

ஆயினும், ஈ. வெ. இரா. மட்டும் தமிழரினத்தின் அம் மாபெரும் மொழிப் போராட்டத்தை அடாது விடாது கொச்சைப்படுத்தியே எழுதிவந்தார்.

> “பேராயக் கட்சி சாதியை ஒழிக்கிறது; பணக்காரனை ஒழிக்கிறது. அப்பேர்ப்பட்ட பேராயக் கட்சியை ஒழிக்கத் திராவிட முன் னேற்றக் கழகம் வீடணனாக இருக்கிறது. உழவர் கட்சி, குடி யரசுக் கட்சி, முத்துராசா கட்சி, நாம் தமிழர் கட்சி, தமிழரசுக் கழகம், இடது பொதுவுடைமைக் கட்சி, ஆச்சாரியாரின் கட்சி, வணிகர்களின் கட்சி ஆகிய அத்தனையும் சேர்ந்து பேராயக் கட்சியை வலுவிழக்கச் செய்வதென்பது குமுக முரண்டு [சமூக விரோதம்] அல்லவா?”[33]

என்றெல்லாம் தொடர்ந்து எழுதியும் பேசியும் வந்தார். தம்மைப் போற்றி அரசியலில் பெரிய ஆளாக்கிய தமிழ் மக்களுக்கும் அவர் களின் நலன்களுக்கும் எதிராகவே செயல்பட்டுவந்தார். வேறெந்த மாநிலத்திலாவது இது போன்ற கூத்து நடந்திருக்குமா?

## தமிழைப் பழித்தோர், தாயைப் பழித்தோரே!

இந் நிலையில், ஈ. வெ. இரா.வின் சீற்றமெல்லாம் தமிழின்மீது திரும்பியது. **தாய்ப்பால் பைத்தியம்** என்ற தலைப்பில் அவர், **“எனக்குத் தமிழ்ப்பற்றுமில்லை; நான் தமிழனுமில்லை!”**[34] என்று **விடுதலை**யில் எழுதினார்.

> “இன்றைய நாளில்கூட மேற்கண்ட தமிழ்த்தாயின் பாலை நேரே அருந்தி வளர்ந்த பிள்ளைகள் ஆங்கிலப் புட்டிப்பாலை அருந்தி இருப்பார்களேயானால், (இந்த அன்பர்கள் உட்பட) எவ்வ ளவோ ஆற்றலும் திறமையும் உடையவர்களாக ஆகி, இவர்கள்

வாழ்க்கை நிலையே வேறாக — அதாவது அவர்கள் நல்ல பயன் அடைபவர்களாக — ஆகி இருப்பார்கள் என்பதோடு, மற்றவர்களுக்கும் பயன்படும்படி நல்ல உரமுள்ள உழைப்பாளராகி இருப்பார்கள் என்று உறுதியோடு கூறுவேன்"[35]

என்றும் அக் கட்டுரையில் தமிழுக்கு எதிராகவே எழுதினார். தாய்மொழிக் கல்வி என்ற அடிப்படை மாந்தவுரிமையைச் சிறுமைப்படுத்தினார்.

"தாய்ப்பாலை (தமிழை) எதற்காகப் படிக்க வேண்டும்? படித்த பிறகு, அஃது எதற்குப் பயன்படுகிறது?"[36]

என்றும்,

"இன்றைய முற்போக்குக்கு முதல் எதிரி தாய்ப்பால் குடித்த மக்கள்தானே?"[37]

என்றும் தொடர்ந்து எழுதித் தமிழின்மீது சேற்றை வாரி இறைத்தார். தாய்மொழியின்மேல் பற்று வைத்தால் அது 'பிற்போக்கு'! தாய்மொழியின்மீது பற்று வைக்கவில்லையெனின், அது 'முற்போக்கு'!

"இன்றைக்கு எந்தத் துறையிலானாலும் நமக்குத் திறமை ஏற்பட வேண்டுமானால், (ஆங்கில) புட்டிப்பாலில்தானே எண்ணங்கள், செயல்முறைகள், பண்டங்களின் பெயர்கள், பாகங்களின் பெயர்கள், நடைமுறையின் பெயர்கள், அடிப்படைக் கருத்துக்கள் முதலியவற்றை அறிந்து வரும்படி நம் மக்களை மேல்நாடுகளுக்கு அனுப்பிவைக்க முடிகிறதே தவிர, நமது தாய்ப்பால் (தமிழ்) இது போன்று எதற்காகவாவது பயன்படுகிறதா?"[38]

என்றும் பேசி, அவர் வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சினார்.

ஆனால், இவர் வானளாவப் புகழ்ந்த ஆங்கிலத்திற்குச் சொந்தக்காரராகிய ஆங்கிலேயரோ, வேறெந்த ஐரோப்பிய நாட்டவரோ, யப்பானியரோ, 'முற்போக்கு' என்னும் சாக்கில் தத்தம் தாய்மொழியை என்றாவது மறந்ததுண்டா? இல்லையே! ஆனால், கன்னடரான பெரியார் தமிழுக்கு வைத்த அளவுகோலே தனி!

தமிழகப் பொதுவுடைமைக் கட்சிகளின்மீது பெருஞ்சுமையாய் அமர்ந்துகொண்டு, அவர்களைத் தமிழ் மக்களோடும் மண்ணோடும் ஒட்டவிடாமல் செய்த ஸ்டாலினுடைய மொழியியல் கொள்கையின் தாக்கத்தினால், மொழி என்பது ஒருவர்க்கொருவர் தத்தம் கருத்துகளைப் பரிமாறிக்கொள்ள உதவும் வெற்றுக்கருவியேயன்றி வேறில்லை என்னும் கருத்தை வடுகப் பெரியார் அக் கட்டுரையில் ஒப்புவித்தார். அதனால் அவர்,



"இதைத் தவிர, மொழியில் வேறு என்ன இருக்கிறது? இதற்காகத் தாய்மொழி என்பதும், தகப்பன்மொழி என்பதும், நாட்டுமொழி என்பதும், முன்னோர் மொழி என்பதும், மொழிப்பற்று என்பதும் ஆகியவற்றையெலாம் மொழிக்கு எதற்குப் பொருத்துவது?"[39]

என்று சொல்லிச் சீறினார். தமிழ்மொழிப்பற்றுக்குக்கூடப் பிராமணர்களே காரணம் என்று சொல்லி அவர் அடாவடித்தனம் பொங்கப் பேசினார். தமிழருக்கு இயல்பாக இருக்க வேண்டிய மொழிப்பற்றும் கூடப் பிராமணரின் சூழ்ச்சியால்தான் வருவதாகச் சொல்லிப் பொய் வழக்காடினார்; 'பார்ப்பான்' பூச்சாண்டி காட்டினார்.

"இந்தி கட்டாயம் என்பதால்தானே தமிழ்மொழிப் பைத்தியம் நமக்கு ஏற்பட்டது? இது பார்ப்பனர்களின் திறமையேயாகும்"[40]

எனச் சொல்லித் தனக்கேயுரிய தனிநடையில் அடாவடியாய்ப் பேசிய ஈ. வெ. இரா., அதற்கடுத்த வரியிலேயே முன்னுக்குப்பின் முரணாக,

"பார்ப்பனர்களில் யாருக்காவது, எங்காவது தாய்மொழிப்பைத்தியமோ, தாய்மொழிப் பற்றோ இருக்கிறதா?"[41]

என்றும் கேட்டுவைத்துக் குழப்பினார்.

புயலென எழுந்த இளந்தமிழர்கள் பலர் தம் இன்னுயிர்களைத் தமிழுக்குக் காணிக்கையாக்கிய 1965 மொழிப் போராட்டம் ஓய்ந்த பின்னரும், வடுகரான பெரியார் மட்டும் தமிழையும் தமிழ்த் தேசிய உணர்வையும் தூற்றுவதை நிறுத்தினாரில்லை.

1965 ஏப்ரல் 11 அன்று **ஆனந்தவிகடன்** ஏட்டிற்காகச் 'சாவி' என்பார் வடுகப் பெரியாரைச் செவ்வி(பேட்டி) கண்டபோது இந்திப் புகுத்தலுக்கு ஆதரவாக அவர் கூறிய கருத்துகள் பேரதிர்ச்சியைத் தர வல்லவை; இந்திப் புகுத்தலைப்பற்றி அவர் அதுவரை படித்துவந்த பாடங்களுக்கு நேர்மாறானவை.

இனி, அவற்றை அவரே சொல்லக் கேட்போம்:[42]

"**சாவி:** அந்தக் காலத்தில் இந்தியை எதிர்த்துப் போராட்டமெல்லாம் நடத்தினீர்களே, இப்போது ஏன் சும்மா இருக்கிறீர்கள்?

"**பெரியார்**: அப்படியா? மன்னிக்க வேண்டும். இப்போது இந்தி எங்கே இருக்கிறது? தெரியாமல்தான் கேட்கின்றேன், சொல்லுங்கள்!

"**சாவி**: இந்திதான் ஆட்சிமொழியாக வந்துவிட்டதே!

"**பெரியார்**: எங்கே வந்துவிட்டது? உனக்குத்தான் ஆங்கிலம் இருக்கின்றதே! இந்தியா ஒன்றாயிருக்க வேண்டுமானால், பொதுவாக ஓர் ஆட்சிமொழி வேண்டியதுதானே? இந்திக்

காரன் உங்களைப் போல் ஆங்கிலத்தை நினைக்கவில்லையே! ஆங்கிலத்தை இழிவு என்று நினைக்கிறானே! தமிழ்நாட்டுக் காரன் சொல்கிறபடி நடக்குமா? அது மக்களாட்சியா?

"**சாவி**: ஒரு நாளைக்கு இல்லாவிட்டாலும் ஒரு நாளைக்கு இந்தி வரத்தானே போகிறது?

"**பெரியார்:** நன்றாயிருக்கிறதே! ஒரு நாளைக்கு இல்லாவிட் டாலும் ஒரு நாளைக்குச் சாவு வரத்தானே போகிறது என்று எவனாவது இப்பொழுதே கிணற்றில் விழுவானா? அப்படியே ஒருவேளை இந்தி வந்ததென்றால், உயிரோடு இருந்தால், அதை எதிர்க்கப் போகிறவன் நான்தானே?

"**சாவி:** இந்தி வந்துவிட்டதெனில், நாமெல்லாம் இரண்டாந் தரக் குடிமக்களாகிவிடப் போகிறோம். நாம் ஏன் இரண்டாந் தரம் ஆகல் வேண்டும்?

"**பெரியார்:** நீ இரண்டாந்தரக் குடிமகனாகிவிடுவேனென்று சொன்னால், ஆங்கிலம் வந்தால் இந்திக்காரன் மூன்றாந்தரக் குடிமகனாகி விடுவேனென்று சொல்லுவான்!

"**சாவி**: மும்மொழித் திட்டப்படி நாம் இந்தி கற்றுக்கொள்ள வேண்டி வரலாமல்லவா?

"**பெரியார்**: மும்மொழி திட்டம் என்றால் என்ன கொஞ்சம் நீங்கள்தான் சொல்லுங்கள்; விளங்கவில்லை. (விளக்கிக் கூறிய பின்னர்) உம், சரியாய்ப் போயிற்று. ஏதாவதொரு அயன்மொழி படித்தல் வேண்டுமென்றால், அஃது இந்தியாகவே இருந்து விட்டுப் போகட்டுமே! படிக்க வேண்டும் என்று கட்டாயப் படுத்துகிறார்களா?

"**சாவி**: இப்பொழுது கட்டாயம் இல்லை. இனி வந்தால்?

"**பெரியார்**: வரும்பொழுது பார்த்துக்கொள்ளலாமே! இப் பொழுது அதற்கு என்ன?

"**சாவி**: நடுவரசில் அலுவல் கிடைப்பதற்கு இந்தி தேவையில் லையென்றாலும், அலுவலில் சேர்ந்த பிறகு படிக்கச் சொல் கிறார்களே!

"**பெரியார்:** படித்துவிட்டுப் போயேன். வட்டாட்சித் தலைவர் (தாசில்தார்) அலுவலுக்குப் படிக்கப் போகிறவர்கள் அளத்தல் (Survey) முறைப் படிப்புப் படிக்கிறதில்லையா? அதுபோன்று இந்தியைப் படித்துக்கொள்கிறது? அவன் நேரத்திலே அவன் கொடுக்கிற ஊதியத்திலே நீ இன்னொரு மொழியைப் படித்துத் தெரிந்துகொள்கிறாய்! இது மிச்சந்தானே?"



தலை பம்பரமாய்ச் சுற்றுகின்றதா? வடுகராகிய பெரியாரின் இத் தலைகீழ்ப் புரட்டுக்குக் காரணமென்ன?

அந்தச் சாவியிடம் ஈ. வெ. இரா. தொடர்ந்து கூறியதை அவரே சொல்லக் கேட்போம்:

"**சாவி:** அடுத்தாற்போல் ஏதேனும் இயக்கம் நடத்தப் போகிறீர் களா?

"**பெரியார்:** நடத்த வேண்டும். எது நடத்தினாலும் அஃது அரசாட்சிக்கு எதிராக நடத்த வேண்டியிருக்கிறது. அப்படி நடத்தினாலும் அஃது எதிர்க்கட்சிக்காரன்களுக்கு உதவியாகி விடும். அதனால் அதைப்பற்றி ஆராய்ந்துதான் முடிவுசெய்ய வேண்டும்."

இந்தக் கருத்தின் வழியாகத் தெள்ளத் தெளிவாக விளங்குவது, ஈ. வெ. இரா.வின் அச்சத்திற்கெல்லாம் காரணம் அண்ணாவின் கை ஓங்கி விடுமோ என்ற எண்ணமேயாகும். அவரால் தூற்றப்பட்டுவந்த தி. மு. க.வே அம் மொழிப் போராட்டத்தால் பெரும் பயனடையும் என்னும் அச்சமே அஃதாகும். இதனால், அவ் வடுகப் பெரியாரின் மொழி நிலைப்பாடு எங்குபோய் முடிந்தது?

"ஆங்கில எழுத்துக்களையே தமிழ் எழுத்துக்களுக்கு நெடுங்கணக் காக — அகர வரிசையாக — எடுத்துக்கொள்ளலாம் என்றும், தமிழ் உச்சரிப்புக்கு ஏற்ற எழுத்து ஆங்கிலத்தில் ஏதாவது ஒன்றி ரண்டு குறையுமானால், அதற்கேற்ற தமிழ் எழுத்தையே எடுத்துக் கொள்ளலாம் என்றும் சொன்னதோடு, மற்றும் ஆங்கிலமே தமிழனின் பேச்சுமொழியாக ஆகும்படியான காலம் ஏற்பட் டால் நான் மிக மிக மகிழ்ச்சியும் நிறைவும் அடைவேன் என்றும் பேசியிருக்கிறேன்""[43]

என்றும்,

"உங்கள் வீட்டில் மனைவியுடனும் குழந்தைகளுடனும் மட்டு மன்றி வேலைக்காரிகளுடனும் ஆங்கிலத்திலேயே பேசுங்கள்; பேசப் பழகுங்கள்; பேச முயலுங்கள்! தமிழ்ப் பைத்தியத்தை விட்டொழியுங்கள்!"[44]

என்றெல்லாம் உளறிக்கொட்டி, தமிழுக்கும் தமிழினத்திற்கும் எதிராகத் திருவாய் மலர்ந்தருளியதில் போய்முடிந்தது!

மொழி இன்றி, ஒரு தேசிய இனம் இருக்க இயலுமா? 'ஒரு தேசிய இனத்தை அழிக்க வேண்டுமாயின், முதலில் அதன் மொழியை அழித்தொழி!' என்பதுதானே வல்லரசாளரின் தனி உத்தியாக இருந்து வந்துள்ளது?

இவற்றுடன், பெரியார் பேராயக் கட்சியிலிருந்து விலகியபின், ஆங்கிலேயரின் ஆட்சிக்கெதிராக எத்தகைய போராட்டங்களையும் நடத்தியதில்லை. ஆச்சாரியார், பக்தவச்சலம் ஆகியோரின் ஆட்சி களைத் தவிர வேறெந்த ஆட்சியையும் அவர் எதிர்த்ததும் இல்லை என்னும் பெரிய உண்மையை இங்கு மனத்தில் கொள்ள வேண்டும்.

**வெண்ணெய் திரளுகையில், தாழியை உடைத்தாரே!**

தமிழருக்கெனத் தமிழ்த் தேசியத் தன்மையுள்ள ஓர் அரசியல் அமைப்பு ஏற்படுவதைப் பெரியார் என்றுமே தடுத்தும் கெடுத்தும் வந்துள்ளார்.

சேலத்தில் 1944ஆம் ஆண்டில் நடந்த மாநாட்டில் நயன்மை (நீதி)க் கட்சி என்றழைக்கப்பட்ட தென்னிந்திய நலவுரிமைக் கழகத்தின் பெயரைத் **திராவிடர் கழகம்** என மாற்றினார் பெரியார். கி. ஆ. பெ. விசுவநாதன், அண்ணல் தங்கோ, மு. தங்கவேலு, சவுந்தர பாண்டியன் ஆகியோர் நயன்மைக் கட்சியின் பெயரைத் 'திராவிடர் கழகம்' என மாற்றுவதற்கு மாறாகத் **தமிழர் கழகம்** என்று பெயரிட வேண்டுமென எவ்வளவோ போராடிப் பார்த்தனர். ஆனால், ஈ. வெ. இரா.வோ அடாவடித்தனமாக அதை ஏற்க மறுத்தார்; தமிழகத்தில் விடாப்பிடி யாகத் 'திராவிட' மாயையை ஊன்றினார்.

> "திராவிடர் என்பதற்கு மாறாகத் 'தமிழர்' என்று ஏன் வழங்கக் கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். தமிழர் என்று சொன் னாலே பார்ப்பனர்கள், நாங்களும் தமிழர்கள்தாம் என்று கூறி அதில் சேர்ந்துகொள்கிறார்கள். 'நாங்களும் தமிழ்நாட்டில் பிறக்கிறோம்; வளர்கிறோம்; தமிழே பேசுகிறோம்; தமிழ்நாட் டிலேயே இருக்கிறோம். அப்படி இருக்கும்போது எப்படி எங் களைத் தமிழர்கள் அல்லர் என்று நீங்கள் கூற முடியும்?' என்று கேட்கிறார்கள். ஒரு காலத்தில் தமிழர் என்பது 'தமிழ்(திராவிட)ப் பண்புள்ள' மக்களுக்கு உரிய பெயராக இருந்திருக்கக் கூடுமா னாலும் இன்று அது மொழிப்பெயராக மாறிவிட்டிருப்பதால், அம் மொழியைப் பேசும் 'ஆரியப் பண்புடைய' மக்கள் யாவரும் தாமும் தமிழர் என உரிமை பாராட்ட முன்வந்துவிடுகிறார்கள். அதோடு, ஆரியப் பண்பை நம்மீது சுமத்த, அச் சேர்க்கையைப் பயன்படுத்திவிடுகிறார்கள்"[45]

என்பதே பெரியாரின் வழக்காடலாக இருந்தது.

> "'திராவிடக் குமுகம்' என்று நம்மைச் சொல்லிக்கொள்ளவே பெரும்பாடாயிருக்கும்போது, தமிழர் என்று எல்லாரையும் ஒற்றுமையாக்க முயற்சியெடுத்தால் இன்னல்கள் கூடும். இங் கேயே பாருங்கள்! கண்ணப்பர் தெலுங்கர், **நான் கன்னடியன்,** தோழர் அண்ணாதுரை தமிழர்.* இனி எங்களுக்குள் ஆயிரம் சாதிப்பிரிவுகள். என்னைப் பொறுத்தவரையில், நான் தமிழன் எனச் சொல்லிக் கொள்ள ஒப்புகிறேன். ஆனால், எல்லாக் கன்னடியர்களும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். தெலுங்கரும் அப்படியே. எனவே, 'திராவிடக் குமுகத்தின் உறுப்பினர்கள் நாம்; நம் நாடு திராவிட நாடு' என்று வரையறுத்துக் கொள்வதில் இவர்களுக்கு மறுப்பு இருக்காது. அது நன்மை பயக்கும்"[46]



என்னும் சாக்கில் தமிழருக்கென்று ஒரு தனி அரசியல் அமைப்பு உருவாவதைப் பெரியார் முறியடித்தார்.

பழைய சென்னை மாகாணத்திலிருந்த தமிழ்ப் பகுதிகளுக்கு அப்பாலிருக்கும் கன்னடர்களும் தெலுங்கர்களும் மலையாளிகளும் திராவிடக் கொள்கையைத் தொடக்கத்திலிருந்தே ஏற்றுக்கொள் ளாதது அவருக்குத் தெரியும். ஆயினும், அவர் குறிப்பிடும் கண்ணப் பரான தெலுங்கரும், ஈ. வெ. இராமசாமியாகிய கன்னடரும் அம் மாகாணத்திலடங்கிய தமிழ்ப் பகுதியினராவர். இதனால், தமிழகத்தில் மட்டுமே அத் திராவிடக் கொள்கைக்குக் கடைவிரிப்பது என்னும் தெளிவு பெரியாருக்கு அப்போதே இருந்தது.

தமிழ்த் தேசியம் தமிழரிடையே கால்கொள்வதைப் பெரியார் தடுத்தும் அடுத்தும் கெடுத்த இரண்டாவது பெரிய கருக்குலைப்பு இஃதாகும்.

> **நமது மொழி தமிழ் என்றார்;**
> **எனது மொழி கன்னடம் என்றார்**[47]

என்னும் பாடல் வரிகள், பெரியார் எந்த அளவுக்குத் தம்மைத் தமிழ ராய்க் கருதினார் என்பதைத் தோலுரித்துக் காட்டவல்லன. கூட்டத் தில் பெரும்பாலோர் தமிழராயிருக்கையில், அவர்களைப் பார்த்துத் "தமிழராகிய நாம்" என்றார் அந்தப் பெரியார். ஆனால், 'நான்' என்னும் தற்சுட்டை ஆண்டபோதெல்லாம், அவர் "கன்னடராக" மட்டுமே இருந்தார். இதனால் ஒட்டுமொத்தத்தில் ஏமாந்தவர்கள் தமிழர்களே யாவர்.

* அண்ணாதுரை தமிழரல்லர். அண்ணாதுரை பிறந்த காஞ்சிபுரம் மாவட்டத் தில் அவரது சாதியைத் **தேவடியாள் வகை முதலியார்** என்று குறிப்பிடுவர். இது மிகச் சிறிய சாதி. இவர்கள் தேவதாசிகளின் வழிவந்த தெலுங்கராவர். திருமலை நாயக்கன் காலத்தில் தேவதாசிகளின் பிள்ளைகளுக்கும்கூட 'முதலியார்' அல்லது 'பிள்ளை' என்னும் பட்டம் வழங்கப்பட்டது. இவ்வாறு 'முதலியார்' ஆனவர்களே அண்ணாவின் முன்னோர். தேவதாசிகளில் பலர் வடுகராயிருந்தனர். இதனால், அண்ணாவின் தாய்மொழி தெலுங்கேயாகும்.

## குதிரை முட்டை

1949ஆம் ஆண்டில் தம்முடைய 72ஆம் அகவையில் 26 அகவையினரான மணியம்மையை ஈ. வெ. இரா. கைப்பிடித்தார். அந்தப் பொருந்தா மணத்தைக் காரணம் காட்டி, அண்ணாத்துரை ஈ. வெ. இரா.வின் திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்தார். அதே ஆண்டில் 'திராவிட முன்னேற்றக் கழகத்தை' அவர் தோற்றுவித்தார்.

அடுத்து, ஆந்திரமும் கேரளமும் கருநாடகமும் மொழிவழியில் தனித்தனி மாநிலங்களாக அமைந்தபின், தமிழ்நாடு இந்தியாவிலிருந்து பிரிந்து தனிநாடாக வேண்டுமென்று ஈ. வெ. இரா. குரலெழுப்பத் தொடங்கினார். ஆனால், 1953ஆம் ஆண்டில் பொட்டி சீராமுலு தனி ஆந்திரம் கேட்டுப் பட்டினி கிடந்து இறந்தபின், ஆந்திரம் வன்முறைக் களமானதைக் கண்டு அரண்ட இந்தி(ய) அரசு, தென்மண்டிலம் (தட்சிணப் பிரதேசம்) என்ற அமைப்பைச் சூழ்ச்சியால் திணிக்க முயன்றது. பெரியார் விலைகூறி வந்த பழைய சரக்கையே புதிய ஒரு மேலுறையால் போர்த்து மூடி விலைகூறத் தொடங்கியது தில்லி வல்லரசு! இராசாசியின் மூளையும் அதற்குத் துணைபோனது. ஆனால், தென்மண்டிலத் திட்டத்தை 'திராவிடநாடு' வேண்டுமென ஒருகால் கேட்ட வடுகப் பெரியாரே எதிர்க்கலானார்.

மொழிவழி மாநிலங்களாகப் பழைய சென்னை மாகாணம் பிரிந்த பின்னரும், திராவிடநாடு வேண்டும் என்னும் கவைக்குதவாத முழக்கத்தைத் திராவிட முன்னேற்றக் கழகம் விடாது கட்டியழுது கொண்டிருந்தது. அத் திராவிடநாட்டிற்கு மாறாகத் தனித்தமிழ்நாடு வேண்டுமென அண்ணல்தங்கோ கேட்டபோது, நாலணா கேட்டால் ஓரணாவாவது கிடைக்குமெனச் சிறுபிள்ளைத்தனமான "நாலணா ஓரணா" கதையைக் கூறித் தனித்தமிழ்நாடு முழக்கத்தை அண்ணா எதிர்த்தார்.

"பழைய கள், புதிய மொந்தை" என்பதைப்போல், திராவிடநாடு கோரிக்கையின் மறுவுருவே தென்மண்டிலத் (தட்சிணப் பிரதேசத்) திட்டமென்பது கண்கூடான உண்மை. மொழிவழி மாநிலங்களை அமைத்த பின்னர், திராவிடநாடு என்ற கோரிக்கையின் போலிகையாம் தென்மண்டிலத்தை அமைத்தால், தமிழக அரசியலுக்குப் பெரிய கேடே விளையும் என்பதை நன்கறிந்திருந்ததாலேயே பெரியார் அதை எதிர்த்தார்.

ஈ. வெ. இரா. கன்னடராயினும், எந்தக் கன்னடன் அவரது கொள்கைகளை ஏற்றுக்கொண்டான்? அடுத்துத் தெலுங்கரையும் மலையாளிகளையும் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. தனி ஆந்திரம் பிரிந்த பின்னரும் தமிழகத்தில் தொடர்ந்து தங்களது பிடிப்பு



களை நிலைப்படுத்திக்கொள்ள விரும்பியவர்களன்றோ அந்தத் தெலுங்கர்கள்? சென்னை அவர்களுக்குக் கிடைக்காத போதும் அச் சென்னையிலேயே புதிய ஆந்திரத்தின் தலைநகரை வைத்துக் கொள்ள விரும்பியவர்களன்றோ அத் தெலுங்கர்கள்? இதனால், "தனித்தமிழ் நாடே திராவிடநாடு!" என்று சொல்லி ஒரு பொருந்தா விளக்கத்தை வடுகப் பெரியார் முன்வைத்தார்.

திராவிடநாடு கேட்பதைக் கைவிட்டுவிட்டு இன்று தமிழ்நாடு மட்டும் தனியாக வேண்டுமென்று ஈ. வெ. இரா. கேட்பதில் என்ன ஞாயம் உண்டெனத் தி. மு. கவினர் கேட்டதற்கு ஈ. வெ. இரா. 23.11. 1958 அன்று அளித்த விடை இது:

> "அன்று நாம் கேட்டது சென்னை மாகாணத்தை. இன்று நாம் கேட்பது சென்னை மாநிலத்தை ......முன்பு சென்னை மாகாணம் என்பது தமிழ்நாட்டுடன் ஆந்திர, கேரள, கருநாடகப் பகுதிகளும் இணைந்திருந்த பகுதி. மொழிவழியில் மாநிலங்கள் அமைக்கப் பட்ட பின்பு, இன்று சென்னை மாகாணம் என்பது தமிழ்நாடு மட்டுமே. இதனால் கோரிக்கை மாறவில்லை. எல்லைதான் சுருக்கப்பட்டுவிட்டது"[48]

என்று மிகவும் சரியாகவே விளக்கம் தந்தார். மொழிவழியில் 1956 ஆம் ஆண்டிலேயே சென்னை மாகாணத்தைக் கூறாடிய பின்பும், 1958ஆம் ஆண்டிலும் திராவிட முன்னேற்றக் கழகம் 'திராவிடநாடு' என்ற செத்த மாட்டைத் தலையில் சுமந்துகொண்டு திரிந்தது. இடம், பொருள், ஏவல் தெரியாமையால் வந்த தமிழரின எதிர்ப்புநிலையே அதுவாகும்.

தமிழர் நலன்களுக்கு எதிர்ப்பாகத் தென்மண்டிலம் (தட்சிணப் பைதிரம்) என்னும் திட்டத்தைத் தமிழரினத்தின்மீது திணிக்கப் பார்த்த இந்தி(ய) வல்லரசின் சூழ்ச்சிக்குத் துணைபோகும் கயமையாகவே தி. மு. கவின் 'திராவிடநாடு' கோரிக்கை இருந்தது என்பதே அன்றைய கண்கூடான மெய்ம்மை.

தம்முடைய கட்சியின் மடியில் தெலுங்கர்களையும் கன்னடர்களையும் மலையாளிகளையும் தலைவர்களாக வாரிக் கட்டிச் சுமந்து நின்றதாலேயே அண்ணாவும் அந்த இழவெடுத்த 'திராவிட நாடு' கோரிக்கையைக் கைவிடத் துணியவில்லை. நடப்பு மெய்ம்மையைப் பற்றிப் பெரியாருக்கு இருந்த தெளிவும் துணிவும் அண்ணாவுக்கு இல்லாமல் போய்விட்டது.

இதனால், கி. வீரமணி எழுதிய **தமிழ் நாடா? திராவிடநாடா?** என்னும் ஒரு நூலைக் குடி அரசுப் பதிப்பகம் வெளியிட்டது.[49]

தி. மு. கவின் முதல் மாநில மாநாட்டின் முதல்நாளான 13.12. 1951 அன்று இரவு அந்த மாநாட்டில் **குலமுலேனி பில்லா** என்னும் தெலுங்கு நாடகம் நடைபெற்றது.[50] அக் கழகம் பிறந்தபோதே, தெலுங்கர்கள் அதன்மீது கொண்டிருந்த மேலாண்மையை இது காட்டும்.

## சுடுகாடு போன பிணம்

ஆயினும், கன்னடரும் தெலுங்கரும் மலையாளிகளுமாகிய அயல்மாநிலத்தவர் 'திராவிடநாடு' என்ற கூட்டரசுக் கொள்கையை என்றைக்குமே ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்னும் தெளிவு அண்ணாவுக்கும் மெல்லப் பிறந்தது. அதனால், அவர் அத் திராவிடநாடு கோரிக்கையைக் கைவிடக் காலம் பார்த்துக்கொண்டிருந்தார்.

பிரிவினைத் தடைச்சட்டத்தைத் தில்லி கொணர்ந்தவுடனேயே 'சட்டி சுட்டதடா, கை விட்டதடா!' என்று அந்தத் 'திராவிட நாடு' கோரிக்கையை அண்ணா கைவிடுவதற்கு, அவருக்கே இயல்பான கோழைத்தனமும் வாக்குவேட்டை அரசியலுமே காரணமெனச் சொல்வதைவிட, 'திராவிடம்' என்றுமே கைகூடாது என்னும் நடப்பு உண்மையைப்பற்றி அவர் பின்னர்ப் பெற்ற தெளிவே உண்மையான காரணமாகும். திராவிடநாட்டுக் கோரிக்கையை அவ்வாறு அண்ணா கைவிட்டதற்கான உண்மையான அக் காரணத்தைப்பற்றித் தி. மு. கழகத்தவருக்கே இன்னும் தெரியாது.

அண்ணா சந்தடியின்றிக் கைவிட்டுவிட்ட செத்தமாட்டைக் கட்டியழக் கன்னடரான ஈ. வெ. கி. சம்பத்துக்கு மட்டுமென்ன பெரிய துடிப்பு என்னும் கேள்வி எழுவது இயற்கை. அண்ணாவுடன் முரண்படுவதற்கான ஒரு சாக்காக மட்டுமே சம்பத் அந்தத் திராவிடநாட்டுக் கோரிக்கையை வலியுறுத்தி வந்தார்.

திராவிட முன்னேற்றக் கழக இளைஞர்களிடம் சம்பத்தின் கை ஓங்கிவந்ததைக் கண்டு அரண்ட அண்ணா, "அடைந்தால் திராவிட நாடு, இல்லையேல் சுடுகாடு!" என்று வெற்றுக்கு முழங்கி ஓய்ந்ததோடு சரி. செத்துப் பிறந்த அந்தத் தனித் திராவிடநாட்டுக் கோரிக்கையைச் சம்பத்தும் அதனால் முழங்கிப் பார்த்தார்.

அத் திராவிடநாட்டை அடைய முடியாத அவர்கள் இறுதியில் சுடுகாட்டை மட்டுமே அடைந்தனர். அஃதாவது, தன்னுரிமையும் மண்ணுரிமையும் அற்ற சுடுகாடாகவே தமிழகத்தைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிவிட்டுச் சென்றனர்.

சம்பத் தொடங்கிய "தமிழ்த் தேசியக் கட்சி", சோவியத் ஒன்றியத்தின் தேசிய இனக் கொள்கையைப் போலிகை செய்தது. அண்ணாவின் தலைமையிலான தி. மு. கவை எதிர்த்து அரசியல் சித்துக் காட்டுவதற்கென்றே உருவாக்கப்பட்டதோர் அமைப்பு அஃதாகும். கன்னடரான அவருக்குத் தமிழ்த் தேசியம் நாடி நரம்பெல்லாம் புரையோடிக் கிடக்க ஞாயமில்லை. 'தமிழ்த் தேசியக் கட்சி' இதனால் செத்துப்பிறந்த குழவியாய்ப் போனது.



## ஈரைப் பேனாக்கிப் பேனைப் பெருமாளாக்குவதோ?

ஈ. வெ. இரா. தமிழர்களைப்பற்றிக் கொண்டிருந்த மட்டமான கருத்திற்கு அவருடைய கட்டுரைகள் சிலவே சான்று கூறும். அது போன்ற கட்டுரைகளைத் தமிழ் இனமானம் கொண்ட இளைஞர்கள் தேடிப்பிடித்துப் படித்தல் நன்று. தமிழர்களைப்பற்றி ஈ. வெ. இராமசாமி நாயக்கர் கொண்டிருந்த மதிப்பீட்டை விளங்கிக்கொள்ள அவை உதவும்.

1943 நவம்பர் 17ஆம் நாளன்று **குடி அரசு** ஏட்டினில் எழுதிய **நம் தாழ்மைக்குக் காரணம் என்ன?** என்னும் கட்டுரை அவற்றில் குறிப்பிடத்தக்கது.

தமிழனின் தாழ்ந்தநிலைக்கு அவர் கூறும் காரணங்களாவன:

1) தமிழனுக்கு அடித்தளமில்லை.

அதை ஈ. வெ. இரா. இவ்வாறு விளக்குகின்றார்:

"அதாவது: அவன் யார்? அவனுக்குச் சொந்தம் எது? அவனுடைய தோற்றுவாய் என்ன? குறிக்கோள் என்ன? இந்த நாலும் தெரியாதவனாகவும், அடிப்படையே இல்லாதவனாகவும் இருக்கிறான். ஆகவே, அடித்தளம் இல்லாத கட்டடம் வெடிப்புக் காணுவதும் அதிருவதும், அதில் (மானமோ மேன்மையோ) குடியிருக்க அஞ்சுவதும் இயற்கைதானே? அதுபோலவே தனக்குச் சொந்தம் இன்னது என்றும் உரிமை இன்னது என்றும் தெரியாதவன் தொட்டதற்கெலாம் அயலானைப் பல்லைக்காட்டிக் கெஞ்சுவதும் ஒண்டுவதும் ஒருவனுக்கொருவன் போட்டி போட்டுப் பின்தள்ளிவிட்டுத் தன் வேலையை மட்டும் பார்த்துக் கொள்வதும் இயற்கைதானே?"[51]

மிகத் தொன்மையான தமிழரினத்திற்கென ஒரு தனி வரலாறே இல்லையென்னும் ஈ. வெ. இரா.வின் இன்மையியக் (Nihilist) கருத்து, அறிவுக்கும் வரலாற்றியலுக்கும் மாந்தவியலுக்கும் புறம்பான ஓர் அழிம்புக் கருத்து. ஆரியச் சார்பு வரலாற்றாசிரியர்களும்கூடக் கூறத் துணியாத அதுபோன்ற ஒரு கருத்தைத் 'திராவிடத் தந்தை' கொண்டிருந்தார்!

2) தமிழனுக்கென்று ஓர் அமைப்பு இல்லை.

3) தமிழன் என்றால் பார்ப்பான், முசுலிம், கிறித்துவன் முதலான எல்லோருமே சேர்ந்துகொள்கின்றனர்.

4) தமிழனுக்கெனத் தனி முறையோ, வழித்துறையோ கிடையாது. அஃதாவது, அவனுக்கென எந்தத் தனிநடை, உடை, தோரணையும் கிடையாது.

5) ஆரியம் கலவாத தனித்த இலக்கியம் எதுவும் தமிழனுக்கு இல்லை.

6) தமிழனைத் தனித்த முறையில் வழிநடத்த எந்தத் தலைவனும் கிடையாது.

7) தமிழருள் தலைமக்களுக்குத் தம் தமிழர் குமுகத்தைப்பற்றி யாதொரு அக்கறையும் கிடையாது. அயலார்கள் என்னதான் இழிவுபடுத்திடினும் தமிழர்கள் அதனைப் பொருட்படுத்தவே மாட்டார்கள்.

8) தமிழனுக்குத் தன்மானம் பிறக்க வழியேயில்லை; அத் தமிழனுக்கு மானம் என்றொன்று இருந்ததேயில்லை.

பெரியாருடைய காலத்தில் சாதிச் சார்பற்ற தமிழர் தலைவர்களான ம. சிங்காரவேலர், பன்னீர்ச்செல்வம், சி. பா. ஆதித்தனார், வ. உ. சிதம்பரனார், திரு. வி. கல்யாணசுந்தரனார், ப. சீவானந்தம் போன்ற மக்கள் தலைவர்கள் இருந்துவந்தனர். அப்படி இருந்தும், அவர்கள் தமிழர்களென்பதால், ஈ. வெ. இரா. அவர்களைத் தமிழர்க்குத் தலைவர்களாகக் கருதியதேயில்லலை.

"தமிழ்நாடு முழுவதற்குமெனத் தமிழனால் மதிக்கப்படக்கூடிய, போற்றக்கூடிய, ஒரு தமிழன்கூடக் கிடையாது"[52]

என்பது அவர் அடிக்கடி படித்துவந்த பாடம்.

தன்னைவிட்டால் தமிழருக்குத் தலைவனே இல்லை என்னும் தான்தோன்றிப் போக்கே அவருடைய போக்காக இருந்துவந்துள்ளது.

அவரே போற்றி வந்த காமராசருக்கும்கூடத் "தமிழர் தலைவர்" என்னும் தகுதியை அந்த வடுகப் பெரியார் தரவில்லை. காமராசர் சென்னை மாநிலத்தின் முதலமைச்சரானபோது,

"தமிழ்நாட்டில் ஒரு பச்சைத் தமிழனின் அமைச்சரவை ஏற்பட்டிருப்பது நமக்கு ஒரு பெருமை. 'நீ ஒரு கன்னடியன். அப்படியிருக்க, நீ எப்படித் தமிழர்களுக்குத் தலைவனாயிருக்க முடியும்?' என்று என்னைக்கூடக் கேட்டார்கள். 'தமிழன் எவனுக்கும் அந்தத் தகுதி இல்லையப்பா!' என்று நான் அதற்கு விடை



சொன்னேன். ஒரு தமிழன் இன்னொரு தமிழன் உயர்வதைப் பார்த்துப் பொறுத்துக்கொள்ள மாட்டான் என்பதே அதற்குக் காரணம்"[53]

என்று 1.6.1954 **விடுதலை**யில் பெரியார் எழுதியதைக் காண்க. அப்போதும்கூடக் காமராசரைத் தமிழர்களின் தலைவராகப் பெரியார் ஏற்றுக்கொள்ளவில்லை. கன்னடரான அப் பெரியார் தமிழர்களின் தனிப்பெரும் தலைவராகத் தமிழகத்தில் தம்மைத் தாமே அமர்த்திக் கொண்டு தமிழகத்தில் பச்சையான ஏமாற்று அரசியல் நடத்திவந்தார்.

தமிழர்களைப் பற்றிய மிக மட்டமான மற்றொரு கருத்தை அதே கட்டுரையில் பெரியார் வெளியிடுகின்றார்:

"திராவிடத்தில் சில நாடுகளில் பொதுமக்களில் சிலர் அண்மைக் காலம் வரையிலும்கூடத் தாங்கள் மேல்சாதிக்குப் பிறந்ததாகப் பெருமை பேசிக்கொள்ளுகிறார்கள். சில பெரிய குடும்பங்களில், 'நல்ல பிள்ளைகள் பிறப்பதற்கு மேல்சாதியார்களை வேலைக்கு வைத்துக்கொள்வது என்கிற மரபு முப்பது நாற்பது ஆண்டுகளுக்குமுன் இருந்ததாக' இன்றைய கிழவன்மார்கள் பேசிக் கொள்வதுண்டு.

"அண்ணன் தம்பி இரண்டு மூன்று பேர், ஒரே பெண்ணைக் கட்டிக்கொண்டு, 'பாண்டவர்'போல் வாழ்வதையும், அக்காள் தங்கை இரண்டு மூன்று பேர்கள் ஒரே கணவனைக் கட்டிக் கொண்டு ஆரியக் கடவுள்களைப் போன்று வாழ்வதையும் முறையே கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் இன்றும்கூடக் காணலாம். அண்ணன் இறந்துபோனால் அவன் மனைவி உடனே தம்பிக்குப் பிறங்கடை மனைவி ஆகிவிடுகிறாள். இதையும் இன்றும் குமுகப் பழக்கமுறையில் பார்க்கலாம்.

"பரத்தைத் தொழிலுக்கென ஒரு சாதி இருப்பதும், அதற்கெனக் குமுகத்திலும் சட்டத்திலும் விதிமுறைகள் இருப்பதும்; தாய், தகப்பன், அண்ணன், தம்பி, அக்கா, தங்கைமார்கள் தங்கள் வீட்டுப்பெண்கள் அத் தொழிலை நடத்த முதலாளிகளாகவும் எழுத்தர்களாகவும் ஏவலாளிகளாகவும் இருப்பதும் இன்றும் திராவிடத்தில் பல இடங்களில் பார்க்கலாம்"[54]

என்று வரும் ஈ. வெ. இரா.வின் வரிகளின் வாயிலாக அதைக் காணலாம். தமிழரினத்தைக் கன்னடரான பெரியார் எவ்வளவு மட்டமாக எடைபோட்டு வைத்திருந்தார் பார்த்தீர்களா?

மேற்சொன்ன வழக்குகள், பிராமணியத்திடம் முழுமையாக அடிபணிந்துபோன கன்னட, தெலுங்கு, மலையாள இனத்தவரிடம்

அண்மை வரையில் இருந்தன; இன்னும் இருக்கின்றன. **யோகினி** என்னும் சாதிப் பெண்டிரை **எல்லம்மா** என்னும் தெய்வத்திற்குப் பொட்டுக்கட்டி அவர்களைப் பொதுமகளிராக்கி மேல்சாதியினர்கள் கொடுமை இழைப்பதன் எச்சங்கள் கன்னட, தெலுங்கு நாட்டினரிடம் இன்றும் உண்டு. அவற்றை எதிர்க்கின்ற போராட்டங்கள் இன்றும்கூட நடந்துவருகின்றன. அதற்காகக் கன்னட, தெலுங்கு, மலையாளத் தேசிய இனத்தவர் எல்லோருமே முற்றும் முழுதுமாய் பொட்டுக்கட்டும் இனத் தவரே என்று சொல்வது நாணயமாகுமா? அப்படியிருந்தும், 'திராவிட' இனத்தவருடன் ஒப்பிடுகிறபோது தமிழருள் பொட்டுக்கட்டுகின்ற வழக்கத்தினர் மிகக் குறைவு. பல நூற்றாண்டுகளாக, தமிழகத்தில் பொட்டுக்கட்டி விடப்பட்ட பெண்டிர் பெரும்பாலோர் தமிழரல்லா தோராகவே இருந்துவந்ததே மெய்ம்மையாகும்.

குமுகியல், மாந்தவியல் துறைகளை எடுத்துக்கொண்டால், பெரியார் குறிப்பிடும் அகத்திணை உறவுகள் வரலாற்றில் எந்த இனத்தாரிடம் அல்லது மக்களிடம்தாம் இல்லை? தமிழரினத்தைத் தாழ்த்தித் தூற்ற வேண்டுமென்றே வேண்டாத வழக்காடல்களை யெல்லாம் ஈ. வெ. இரா. முன்னிறுத்துகின்றார். ஈ. வெ. இரா. தமிழகத்தில் ஒரு வேற்றினத்தில் பிறந்து வளர்ந்து தமிழரிடையே தலைவராக உயர்ந்து சிறந்த போதும், அவருடைய அடிமனத்தில் மட்டும் தமிழரினத்தைப் பற்றிய மிகவும் மட்டமான ஒரு மதிப்பீடு என்றுமே கரந்து மறைந்து இருந்துவந்துள்ளதை உற்றுப்பார்த்தால் நன்கு விளங்கும்.

## நொண்டிச் சாக்கு

தமிழகத்தின் எல்லைகளைக் காப்பதில் வடுகப் பெரியாருக்கும் அவருடைய திராவிடர் கழகத்திற்கும் அதன் வழியில் வந்த திராவிட முன்னேற்றக் கழகங்களுக்கும் எள்ளளவும் அக்கறை என்றுமே இருந்த தில்லை.

தமிழ்-தெலுங்குப் பிராமணரான இராசாசிக்குத் தாய்த் தமிழ கத்தின் எல்லைகளை மீட்க வேண்டும் என்றிருந்த அக்கறை கூடத் திராவிட இயக்கத்தினருக்கு இருக்கவில்லை. தலைநகரான சென்னை மாநகரையே தெலுங்கர் மடிபறித்துக்கொண்டு போகாமல் அரவ மின்றிக் காத்த பெருமையெலாம் இராசகோபாலாச்சாரியாருக்கே போய்ச் சேரும். ஆனால், இருப்பதை விட்டுப் பறப்பதைக் காட்டு வதைப் போல்,

> "பிரிவினையைப் பற்றிய என் கருத்து உங்கள் எல்லோருக்கும் தெரியும். முழு விடுதலையும் பிரிவினையும் வேண்டும் என் பவன் நான். அந்த அளவில் எல்லை எவ்வளவு குறைவாகக் கிடைத்தாலும் கவலை இல்லையென்று சொன்னவன் நான். இன்று காலையிலுங்கூட டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி அவர் களிடம், 'எனக்குச் சென்னை நகரம் பெரிதன்று; அயலான் ஆதிக்கமற்ற, அயலான் சுரண்டலற்ற முழுத் தன்னுரிமையுள்ள பகுதி எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அதுதான் தேவை' என்று சொன்னேன். 'சென்னை ஒரு வேளை போய்விடுமா னாலும் நான் ஒன்றும் மிகையாகக் கவலைப்பட மாட்டேன்' என்றும், 'சென்னை ஒழிந்துபோனால் எஞ்சியிருக்கும் தமிழ் நாட்டை என் விருப்பம்போல் ஆக்கி நாளைக்கே முழு விடு தலை பெற்ற பகுதியாக ஆக்குவதாக விளம்பரம் செய்துவிட முடியும்' என்றும் சொன்னேன். ஆனால், 'நான் நிலப்பரப்புக் காகப் போராடுகிறவன் அல்லன்; விடுதலைக்காகப் போராடு பவன் என்றாலும், இதில் நான் ஏன் உறவுப்படுகிறேன் என்றால், மொழிவழி மாநிலம் வேண்டுமெனச் சொல்லிவருகிறவர்கள், மொழிவழியாகவும் பிரித்துக்கொண்டு, தம் மொழி அல்லாத நாட்டிலும் மேலாண்மை செலுத்தப் பார்க்கிறார்களே என்ற ஒரே காரணத்துக்குத்தானே அன்றி, மற்றபடி சென்னை நகரம் தமிழருக்கோ, தமிழ்நாட்டுக்கோ பெரிய தொண்டு செய்திருக் கிறது—செய்துவருகிறது—அல்லது செய்ய முன்வரும் என்ப தற்காக அல்ல' என்றும் சொன்னேன்"[55]



என்று சொன்னது தமிழருக்கும் தமிழகத்திற்கும் அவ் வடுகப் பெரியார் செய்த பச்சை இரண்டகமேயன்றி வேறில்லை. தமிழ்நாட்டையே தம்முடைய வீட்டுப் புழக்கடையாகக் கருதிவந்த ஈ. வெ. இரா., அத் துடன் நில்லாமல்,

> "'மற்றும் இவை ஒரு பக்கம் இருந்தாலும், நாம் முயற்சிக்காவிட் டால் சென்னை நகரம் ஆந்திரர்களுக்குப் போய்விடுமே என்கிற கவலை சிறிதும் வேண்டியதில்லை. ஏனெனில், பெரும்பான்மை தமிழ்நாட்டுப் பார்ப்பனர் சென்னையில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் ஒருநாளும் சென்னை ஆந்திராவுடன் சேரவோ, அதைத் தனி மாகாணமாக ஆக்கவோ உடன்படமாட்டார்கள். அவர்கள் இதில் வெற்றி பெற்றே தீருவார்கள். ஆதலால், நீங் கள் கவலைப்படவே வேண்டியதில்லை' என்று இன்று காலை யில்தான் சொன்னேன்"[56]

என்றும் கூறித் தமிழரின் வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சினார்.

'இரவல் சேலையை நம்பி, இடுப்புக் கந்தையை எறிந்த' கதை போலிருந்தது அவருடைய கூற்று. தமிழகத்தின் போதாக்காலத்தைப் பார்த்தீர்களா?

மொழிவழியில் பழைய சென்னை மாகாணத்தைப் பிரிக்கும் போதும், ஆந்திரர்கள் தமிழ்ப் பகுதிகளையும் தங்களோடு அள்ளிச் சென்றபோதும்,

"ஆந்திரா-தமிழ்நாடு பிரிவினை என்பது 1921ஆம் ஆண்டிலேயே முடிந்துவிட்டது. அதன் எல்லைகளும் அப்போதே தீர்ந்து போய்விட்டன. முப்பது ஆண்டுகளாக அந்த எல்லைகளை நுகர்ந்துவருகின்ற உரிமைகளும் அவர்களுக்கு வந்துவிட்டன. முப்பது ஆண்டுகளாக இருந்துவரும் அந்த நுகர்ச்சி உரிமையை, எல்லைப்பகுதிகளில் வாழ்ந்துவரும் தமிழனோ தெலுங்கனோ பேராயக் கட்சியோகூட எதிர்த்ததில்லை. எதைச் செய்தாலும் முட்டுக்கட்டையாக இருக்கவேண்டுமென நினைப்பவர்கள் மட்டுமே அவ்வாறு எதிர்த்தனரே யன்றி, இன்று எல்லைகளை மாற்றி வரைய வேண்டும் என்பவர்கள் அன்று அதனை எதிர்க் கவே இல்லை. தமிழர்களில்தாம் ஆகட்டும், இன்றைக்குத் தமிழ் நாட்டு எல்லைக்காகப் போராடுகிறோம் என்று வருகிறார்களே — வீரர்கள் — இவர்கள் இந்த இருபது முப்பது ஆண்டுக்கால மாக என்ன செய்தார்கள்? இன்றைக்குச் சிலர் தங்கள் விளம் பரத்துக்கும் பிழைப்புக்கும் ஒரு வகைசெய்து கொள்வது என்ற தன்னலங்களுக்காகக் கூப்பாடு போடுகிறார்களே தவிர, 'குமரி முதல் வேங்கடம் வரை' என்ற அறிவு இன்றைக்கு மட்டும் வரு வானேன்?"[57]

என்றெல்லாம் 'தமிழர்களின் தலைவ'ரெனச் சொல்லிக்கொண்ட ஈ.வெ. இரா. கூறியது, தமிழர்களின் தாய்மண்ணுரிமையைப் பச்சை யாகக் காட்டிக் கொடுப்பதற்கான ஒரு நொண்டிச் சாக்கேயல்லாது வேறில்லை.

கடையிலே கட்டித் தூக்கினாலும், அழுகற் பூசுணைக்காய் அழுகலேதான்! யாருடைய மண்ணையெடுத்து யார் நீரட்டிக் கொடுப் பது? கன்னடரான ஈ.வெ. இரா. அரசியல் களமாடுவதற்குத் தாய்த் தமிழ் மண்தானா கிடைத்தது?

## வேகாத பருப்பு

மொழிவழி மாநிலக் கோரிக்கையையே எதிர்த்த ஈ. வெ. இரா. மொழிந்த கருத்துகள் கவைக்குதவாதன. தெலுங்கனுக்கும் கன்னட னுக்கும் மலையாளிக்கும் **திராவிட மாயை** என்பது அறவே கிடை யாது. உலக நடப்புகளுக்கேற்பத் தாங்கள் தனித்தனித் தேசிய இனங்க ளென்பதை அந்த இனத்தவர்கள் நன்கு உணர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து, தத்தமக்கு ஒரு தனிநிலமும் வரம்பும் வளர்ச்சியும் கொற்ற



மும் கொடியும் வேண்டுமென்னும் நல்ல ஓர்மையை எய்தியது ஓர் இயல்பான போக்கு.

அதை விளங்கிக் கொள்ளாத அப் பெரியார், தம்முடைய வறட் டியக் கொள்கைகளின் அடிப்படையில் அவர்களின் மொழி வழி மாநிலக் கோரிக்கையையே எதிர்த்துவந்தார். அதனால், தமிழகத்திற்கு யாதொரு நன்மையையும் செய்தாரில்லை. தமிழரினமும் ஒரு தனித் தேசிய இனமே என்ற நல்ல ஓர்மை தமிழர்களிடையே வளர்வதை அவர் வேண்டுமென்றே கெடுத்துவந்தார். அதனாலேயே,

"'மொழிவழி' என்பதைப்பற்றி இனிச் சொல்கிறேன். மொழியைத் தழுவி ஒரு நாடு எதற்காகப் பிரிய வேண்டும்? சாதியைத் தழு வியோ, மதத்தைத் தழுவியோ, இனத்தைத் தழுவியோ பிரிவது என்றால் அதற்குப் பொருள் உண்டு. ஏனெனில், அவ்வொவ் வொன்றுக்கும் மாறுபட்டதும் பொருத்தமற்றதும் ஒற்றுமையற் றதுமான கொள்கைகளும் திட்டங்களும் உண்டு"[58]

என்று சொல்லி அளவையியல் பிசகப் பேசிவந்தார். சாதி அடிப் படையில் நாடு, மதத்தின் அடிப்படையில் நாடு, மெய்யின அடிப் படையில் நாடு என்றமைந்த அறிவுக்கொவ்வா வரம்புகளையே நாடு என்பதற்கான இலக்கணமாக வைத்துக் குழப்பினார். மொழி வழியி லான தற்காலத்து நாடுகளின் எழுச்சிகளையும் தேசிய இனங்களின் எழுச்சிகளையும் கொச்சைப்படுத்தினார்.

"மொழிகளில் அப்படிக் கொள்கையோ திட்டமோ பட்டறிவோ பண்பாடோ பழக்க வழக்கமோ மாற்றமாய் இருக்கும்படி நமக் குள் எந்த மொழியுமே இல்லை. மொழியினால் பெருமையோ சிறுமையோ இல்லை; ஊதியமோ, இழப்போ இல்லை. ஆத லால், இதைக் காரணம் காட்டிப் பிரித்துக் கொள்ள வேண்டிய தேவையே இல்லை"[59]

என்னும் கூற்றின் வாயிலாகத் தமிழரினம் ஒரு தனித் தேசிய இனம், தமிழ்நாடு ஒரு தனிநாடு என்னும் தேசிய ஓர்மையைக் குலைக்கவும் கெடுக்கவும் பார்த்தார்.

## கறந்த பால் காம்புக்குள் ஏறுமா?

தமிழுக்கும் தமிழிய (திராவிட) மொழிகளுக்கும் இடையிலான உறவைப்பற்றி ஈ. வெ. இரா. கொண்டிருந்த நிலைப்பாடு, இயற்கைக் கும் அறிவியலுக்கும் என்றும் பொருந்தவே பொருந்தாது. அவ் வடுகப் பெரியாரின் கருத்தில் சென்னை மாநிலத்தில் பேசப்பட்ட தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய தனித்தனி மொழிகள் கிடையாதாம்! அவையெல்லாம் தமிழ்தானாம்! ஆகவே, தெலுங்கும் கன்னடமும்

மலையாளமும் துளுவும் தமிழிலிருந்து தோன்றவில்லையாம். அவை யாவும் போக்குவரத்துக் குறைவு, தட்பவெட்ப வேற்றுமை ஆகியவற்றால், தமிழே வெவ்வேறு வகைகளில் பேசப்பட்டதால் வந்த தமிழின் வடிவங்கள் மட்டுமாம்!

> "தமிழன், தெலுங்கன், கன்னடியன், மலையாளி ஆகியோர் பேசுவதெல்லாம் தமிழ்தான். இவர்கள் பேசுவது வெவ்வேறு மொழி என்று சொல்பவன் தமிழ்மகனல்லன்; தமிழை அறியாதவன்; ஆரியத்திற்குச் சோரம் போனவன்; நம்மைக் காட்டிக்கொடுத்து ஆரிய மேலாண்மைக்கு ஆக்கந்தேட முயற்சிப்பவன். இந் நான்கும் வேறுவேறு மொழிகளென்று கூறுபவர்கள் 'தமிழர் என்று தம்மை நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்; கருதிக்கொண்டிருக்கிறார்கள்' என்று சொல்லலாமே தவிர இவர்களைத் தமிழறிந்தவர்கள் என்று நாம் ஒப்புக்கொள்ள முடியாது"[60]

என்றும்,

> "நமது புலவர்களில் சிலர், இந் நான்கும் ஒன்றிலிருந்தே வந்தவை; ஒரே தாய் வயிற்றில் பிறந்து வளர்ந்த அக்கை தங்கைகள் என்று கருதுகிறார்கள். இது பித்தலாட்டம் என்பதுதான் என் கருத்து. இத் **திராவிடத் தாய்**க்குப் பிறந்தது ஒரே மகள்தான்; அதுதான் தமிழ். அந்த ஒன்றைத்தான் நாம் நான்கு பெயரிட்டு அழைக்கிறோம். நான்கு இடங்களில் பேசப்படுவதால் நான்கு பெயரில் வழங்குகிறதே யொழிய, நான்கிடத்திலும் பேசப்படுவது தமிழ்தான். நான்கும் ஒன்றிலிருந்து உண்டானவை என்று எண்ணுவதுதான் தவறு; ஒன்றுதான் நான்காக, நமது அறியாமையால் கருதப்பட்டு வருகிறது. இதை மெய்ப்பித்துக் காட்ட என்னால் முடியும்"[61]

என்றும்,

> "ஒன்று நான்காக வகுக்கப்பட்டது என்பதற்கும், ஒன்றிலிருந்து நான்கு பிறந்தன, கிளைத்தன என்பதற்கும் வேற்றுமை யுண்டு. ஆகவே, தமிழ், நீண்ட தொடர்பற்ற காரணத்தால் நான்காகப் பிரிந்திருக்கிறதேயன்றி, **தமிழிலிருந்து தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்பவை தோன்றியவை அல்ல; உண்டாக்கப் பட்டவை அல்ல** என்பதைத் திராவிடர்கள் உணர வேண்டும். இந்த உண்மையைத் தெரிந்துகொண்டாலொழிய, இந்த நான்கு நாட்டாருக்குள்ளும் வேற்றுமையுணர்வு தோன்றாமலிருக்காது. இந்த நான்கும் தமிழ்மொழியேதான் என்பதில் சிறிதும் ஐயமில்லை"[62]

என்றும் ஈ. வெ. இரா. சொல்லியது பெரிய குழறுபடி.



அது தயிரும் பாலும் ஒன்றே யென்பது இயங்காவியல் கருத்தாகும். தயிர், பாலிலிருந்து இயல்பால் வேறானதன்று என்பது அறிவியலுக்கும் அறிவுக்கும் புறம்பான வறட்டியமாகும். பிள்ளையும்கூட அப்பனே என்பதைப் போன்ற முரணிலையாகும்.

இவ்வாறெல்லாம் சொல்லிவந்த ஈ. வெ. இராமசாமி நாயக்கர்,

> "தெலுங்கர், கன்னடியர், மலையாளிகட்குள்ள மொழிப்பற்றில், மொழி உணர்ச்சியில் தமிழ்ப் புலவர்களுக்கு நூற்றில் ஒரு பங்கு கூட இல்லை"[63]

என்பது முன்னுக்குப்பின் முரணானது.

தெலுங்கருக்கும் கன்னடியருக்கும் மலையாளியருக்கும் நல்ல மொழிப்பற்று வளர்ந்துவந்த நிலையில், தமிழர்களிடமோ அதற்கு நிகரான மொழிப்பற்று வராமல் போனதற்கு ஈ. வெ. இராமசாமியின் வறட்டுத்தனமான மொழிக்கொள்கையின் தாக்கங்களும் காரணமாகும். கன்னடரிடத்திலும் தெலுங்கரிடத்திலும் மலையாளிகளிடத்திலும் நல்ல மொழிப்பற்று இருந்ததை நன்கறிந்திருந்த ஈ. வெ. இரா, தமிழரிடையே மட்டும் அத்தகைய மொழிப்பற்று வளர்வதை எதிர்த்து வந்ததற்குக் காரணம் இல்லாமலா இருந்திருக்கும்?

> "மற்றும் தெலுங்கர்களையும் கன்னடியர்களையும் மலையாளிகளையும் தமிழர்களாக்க வேண்டுமானால், 'திராவிடர்' என்று சொல்லித்தான் ஆக்க முடியும். 'திராவிடமே தமிழ்; தமிழே திராவிடம்' என்ற புத்துணர்ச்சியைத் திராவிட மக்கள் பெறுவார்களாக!"[64]

என்னும் அறைகூவலை எந்தக் கன்னடனாவது, தெலுங்கனாவது, மலையாளியாவது ஏற்றுகொள்வானா? அது போன்ற நிலைப்பாடு தமிழுக்கும் தமிழ்த் தேசியத்திற்கும் மட்டும் பெரும் கேடாகியது என்பதே வரலாறு.

தமிழனின் மண்ணுரிமையைக் காக்க முடியாத அத் திராவிடக் கொள்கையாலும், தமிழகத்தின் எல்லைப்பகுதிகளை அண்டை அயல் திராவிடர்கள் குழிகுழியாக அரிந்து சென்றபோது கண்டும் காணாமல் நின்ற திராவிடக் கழகங்களாலும், தமிழர்க்கு வந்த நன்மைதான் என்ன? வெறும் கேடுகள்தானே விளைந்தன? தமிழகத்தின் எல்லைகள்தானே குன்றின?

## அவர் விட்ட கரடி

இராசாசி ஆட்சியிலிருந்தபோது ம. பொ. சிவஞானம் நடத்திய எல்லை மீட்புப் போராட்டத்தினால் தமிழகத்திற்குச் சில எல்லைப் பகுதிகள் மீண்டன.

தமிழக எல்லை மீட்புப் போராட்டத்தை வலுப்படுத்தக் கருதிய ம. பொ. சி., ஈ. வெ. இரா.வை அணுகிப் பேசினார். தமிழகத்தின் வடவெல்லையாம் வேங்கடம் அடங்கிய சித்தூரை மீட்பதற்காகத் தமிழகத்திலுள்ள அரசியல் கட்சிகளெல்லாம் ஒன்றுபட்டுப் போராட வேண்டுமெனப் பெரியாரிடமும் அவர் வேண்டுகோள் விடுத்தார். அப் போராட்டத்தில் பங்கெடுக்க வேண்டுமாயின் தாம் முன்வைக்கிற ஐந்து பெரிய அக்குத்துகளையும் (நிபந்தனைகளையும்) ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று ம. பொ. சியிடம் சொன்னதாகவும், அவற்றை ஏற்றுக் கொள்ளாமல் அவர் மழுப்பிவிட்டதாகவும் 29.1.1956 அன்று ஈ. வெ. இரா. வேலூரில் சொன்னார்.[65]

அவர் தாம் முன்வைத்ததாகச் சொன்னவை:

1) தமிழகத்தின் எல்லைகளைக் காப்பதும் தக்கவைத்துக் கொள்வதும் என்பதில் உடன்பட வேண்டும்.

2) இந்தியெதிர்ப்பில் எல்லோரும் ஈடுபட வேண்டும்.

3) படை, போக்குவரத்து, அயலுறவு போன்றன தவிர, பிற அதிகாரங்கள் எல்லாம் அந்தந்த மாநில அரசுகளிடமே இருக்க வேண்டுமெனப் போராட வேண்டும்.

4) **சென்னை அரசு** என்பதை மாற்றி அதற்குத் **தமிழ்நாடு** எனப் பெயரிடப் போராட முன்வர வேண்டும்.

5) தென்மண்டிலம் (தட்சிணப் பிரதேசம்) என்னும் திட்டத்தை எதிர்த்து முறியடிக்க வேண்டும்.

முதலில் தமிழக எல்லைகளை மீட்போம், மற்றவற்றைப் பின்னால் பார்ப்போமென ம. பொ. சி. கூறியதாக ஈ. வெ. இரா. வேலூர் கூட்டத்தில் கூறினார். அன்று நிலவிய அரசியல் சூழலில், ம. பொ. சி.யினது தமிழரசுக் கட்சிக்கும் பொதுவுடைமைக் கட்சிக்கும் அந்த ஐந்து அக்குத்துகளைப்பற்றிப் பெரிய கருத்து வேற்றுமை இருந்திருக்க வியலாது. தமிழரசுக் கழகம் இந்தி(ய)க் கட்டுக்குள்ளேயே தன்னாட்சி கேட்டுவந்ததை உலகறியும். ஆனால் ம. பொ. சி. அதற்கு மறுத்துவிட்டதாக ஈ. வெ. இரா. சொன்னது நம்பக்கூடியதன்று. அஃது ஆட்டைக் காட்டி வேங்கையைப் பிடிக்கப் பார்க்கலாமென்பதைப் போலிருந்தது.

அடுத்து, தேவிகுளம், பீர்மேடு தமிழருக்குரிய பகுதிகளென்பதை வலியுறுத்தும் முகமாக 20.2.1956 அன்று தமிழகத்தில் நடந்த வேலை நிறுத்தத்தில் தமிழரசுக் கழகம், தமிழகப் பொதுவுடைமைக் கட்சி, தமிழக சோசலிசக் கட்சி ஆகியன பங்கெடுத்தன. ஆனால், திராவிடர் கழகமும் பேராயக் கட்சியும் மட்டும் அந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ளாமல் தமிழகத்திற்குப் பெரிய இரண்டகம் செய்தன.



சித்தூரைத் தெலுங்கரிடமிருந்து மீட்பதற்கென ம. பொ. சி. நடத்திய போராட்டத்தில் 'சித்தூர் மாவட்டத்துத் தி. மு. க. வினர் மட்டும் பங்கெடுக்கலாம்' என்பதோடு நின்றது தி. மு. கழகத்தின் எல்லை மீட்புக் கடன்! கட்சியால் கழகத்தவராயினும், தாய்மண் தெலுங்கனுக்கு நீரட்டிக் கொடுக்கப்பட்டுவிட்டதே என்னும் பதற்றம் சித்தூர் மாவட்டத் தி. மு. கழகத்தினருக்கு மட்டும் இருந்திருக்காதா என்ன? அந்தச் சூட்டைத் தணிக்கத்தானே சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த கழகத்தவர் மட்டுமே எல்லைப் போராட்டத்தில் பங்கெடுக்கலாம் எனத் திராவிட முன்னேற்றக் கழகத்தின் மாநிலத் தலைமை அன்று சொன்னது? அன்று தமிழிளைஞரிடம் கால்கொண்டிருந்த தமிழ்த் தேசிய உணர்வை அரசியலாக்கிக்கொண்ட தி. மு. கழகம், தமிழகத்தின் எல்லைகளைக் காத்த அழகு இதுவாகும்.

அதேபோல், 1954 ஆகத்துத் திங்களில் தேவிகுளமும் பீர்மேடும் ஆகிய தமிழ்ப்பகுதிகளை மலையாளிகளுக்கு நீரட்டிக் கொடுத்தபோது அவற்றைத் தமிழகத்திற்கு மீட்கவென நடந்தேறிய எழுச்சிமிக்க அறப் போராட்டத்தில், அப் பகுதிகளைச் சேர்ந்த தி. மு. கவினரும் பங்கெடுத்தனர். அவர்களை ஆதரிக்கும் முகமாக 1954 அக்டோபர் 22 அன்று தமிழகம் முழுவதும் நடந்த கடையடைப்பிலும் வேலைநிறுத்தத்திலும் மட்டுமே மாநிலத் திராவிட முன்னேற்றக் கழகம் பங்கெடுத்தது![66] ஒப்புக்கு ஓர் எதிர்ப்பு! அவ்வளவுதான்!

மண்ணில்லாத மக்களா? நன்கு பேணப்படாத எல்லைகளே இல்லாமல் ஒரு நாடா? வந்தாரை **மட்டுமே** வாழவைத்த தமிழகம் மட்டுமென்ன வாசலில்லா ஒரு வீடா? வேலியில்லாக் காடா?

இந்த இழிநிலை தமிழரினத்திற்கு ஏற்படப் 'பெரியாரியம்' பெரிய காரணம்தானே? தமிழகத்தின் மண்ணும் அரசியலும் பொருளியலும் தமிழரல்லாதோரின் சுரண்டல்களங்களாகிட ஈ. வெ. இரா.வின் திராவிடக் கொள்கையே பெரிய காரணமன்றி, வேறெதைத்தான் காரணமென்பது?

## ஆண்ட இனமன்றோ?

பிராமணரல்லாதார்க்குச் சலுகைகளும் இடவொதுக்கீடும் என்னும் கொள்கையே நயன்மைக் கட்சியில் ஊற்றெடுத்த வழிமுறை. இதன் தொடர்ச்சியே பெரியாரியத்தின் உயிர்நாடியாகும். அரசுத் துறைகளில் இடவொதுக்கீடு என்பது தமிழர்களில் ஒரு பிரிவினரைப் பற்றியது மட்டுமே என்னும் உண்மையை மறைத்து, அதைத் திராவிட அரசியலைத் தாங்கி நிற்கும் கொள்கைத் தூண்களில் ஒன்றாக ஆக்கி வைத்தது ஈ. வெ. இரா.வின் திராவிட இயக்கம்.

பழைய பிராமணியத்தை மட்டும் கணக்கிலெடுத்துக்கொண்ட ஈ. வெ. இராமசாமி, பிராமணரல்லாதோரிடம் புரையோடிவந்த **புதிய பிராமணியம்** என்ற போலிப் பண்பாட்டுக் கூறுகளையும் உளத்திய லையும், அவற்றின் உள்ளீடுகளையும், வினைபாடுகளையும் கருத்தில் கொள்ளவில்லை.

பழைய பிராமணியத்தின் முட்டுத்தாங்கிகளாகி அது நீடிப்ப தற்கு உறுதுணையாக இருந்துவருவது இப் 'புதிய பிராமணரே' என்ற மெய்ம்மையை அவர் என்றுமே புறக்கணித்து வந்துள்ளார்.

சலுகை-இடவொதுக்கீட்டுக் கொள்கையில் நல்ல பயன் பெற் றோர், தமிழகத்தில் தமிழரல்லாதோரே என்பது கண்கூடான உண்மை. சென்னை மாகாணம் கூறாடப்பட்ட போதும்கூட, தாழ்த்தப்பட் டோர், பழங்குடிகள், பிற்படுத்தப்பட்டோர், சீர்மரபினர் ஆகிய சாதிப் பட்டியல்களில் அம் மாகாணத்திலிருந்த பழைய சாதிப் பட்டியல் களே இன்னும் தொடர்ந்து வருவதால், அப் பட்டியல்களில் பாதிக்கு மேல் தெலுங்கர்களாகவும் கன்னடர்களாகவும் மலையாளிகளாகவும், நரிக்குறவர், இலம்பாடிகள் முதலான தமிழரல்லா நாடோடிகளாகவும் இருந்து அவற்றின் பயனை நன்கு துய்த்து வருகின்றனர்.

ஆனால், ஆந்திராவிலோ கேரளத்திலோ கருநாடகத்திலோ இருக் கின்ற சாதிப் பட்டியல்களில் காணும் தமிழகக் கீழ்ச்சாதிகள் மீமிகக் குறைவு. இந்த நெறிகெட்ட முரண்பாட்டைக் கருணாநிதி முதலமைச் சராக இருந்தபோது அமைத்த **சட்டநாதன் குழு** தெளிவாகச் சுட்டிக் காட்டியது. ஆயினும், 1967ஆம் ஆண்டிலிருந்து நடந்துவரும் கழக ஆட்சிகள் அதைத் திருத்த எண்ணியதுமில்லை; முனைந்ததுமில்லை. தமிழரல்லாத 'திராவிடர்' நலன்களைப் பேணுவதையே தலைமேல் கொண்ட அவற்றிடம் அதை எதிர்பார்த்ததும் தவறு.

**மறையர்**களான பழந்தமிழர்கள் அடிமைகளாகவும் தீண்டத் தகாதோராகவும் இன்று இருப்பதைப் போன்று எல்லாக் காலத்தும் இருந்ததில்லை. பாரி முதலான கடையேழு வள்ளல்களாலும் முடி மன்னர்களாலும் பரிசில் தந்து நல்ல மதிப்புடன் போற்றப்பட்டுவந்த பாணர்களும், ஆசான்களாயிருந்த மறையோர்களும், உடன்படுகருமத் தலைவர்களாகவும் பெருங்கணிகளாகவும் அமைச்சர்களாகவுமிருந்த வள்ளுவர்களும்கூடப் பின்னர் மறையர் (பறையர்) குடியில் சேர்க்கப் பட்டு அதன் கிளைகளாயினர். இவர்கள்தாம் தமிழகத்தின் தொல் குடிகள் (aborigines).

அதேபோல், **மழவர்** என்றும் **மள்ளர்** என்றும் இலக்கியங்கள் குறிப்பிடும் பள்ளர்குடியினரே பாண்டியர், சோழர் போன்றோரின்



முன்னோடிகளாய் ஆண்டமரபினராயிருந்ததை இக்கால ஆய்வுகள் காட்டுகின்றன.[67] நாடார்கள் எனப்படும் முன்னாளைய சான்றோர் (சாணார்)களும் பாண்டிய மரபினரென்று கூறிக்கொள்கின்றனர்.[68]

மள்ளர்களையும் பள்ளிகளையும் (வன்னியரையும்) **பள்ளுச்** சாதியினர் என்று பொதுவாகக் குறிப்பிட்டுவந்தனர் என்பதும், இவர் களின் வழிவந்தோரே படையாட்சிகளாகவும் சம்புவராயர்களாகவும் விளங்கித் தமிழ்மண்ணின் சில பகுதிகளை ஆண்டுவந்தனர் என்பதும் கூட வரலாறே.[69] கள்ளர், மறவர் ஆகியோரும் ஆங்கிலேயர் வந்தேறிய காலம் வரையிலும் கொடியுடனும் கொற்றத்துடனும் மண்ணாண்ட மக்களாக இருந்துவந்துள்ளனர். முத்தரையர் போன்ற சாதியினரும் சிற்றரசர்களாக ஆண்டனர். வேட்டுவக் கவுண்டர்களும் வேளாளக் கவுண்டர்களும் தத்தமது பகுதிகளை ஆட்சியுரிமையுடன் ஆண்ட மரபினரே என்பதைக் கொங்குநாட்டு வரலாறு காட்டுகிறது.

நாடாண்ட தமிழ்ச் சாதியினரை யெல்லாம் அடிமைப்படுத்தி, அவர்களிடையே சாதிச் சழக்குகளை மூட்டிவிட்டுத் **தீண்டாமை**, **காணாமை** என்ற கொடிய வழக்கங்களைப் புகுத்தியவர்கள் வேறெந்த 'ஆரியரு'மல்லர். வந்தேறிகளாய் ஆளவந்த (கன்னட- தெலுங்கு) வடுகர் களே அவ்வாறெல்லாம் செய்தனர். தமிழர்கள், சாதியால் கெட்டு வீழவும், தாழ்வுமனப்பான்மையால் தாழவும், உதிரிமயமாகவும் அவர் களே காரணமாயினர்.

தமிழ்ச் சாதியினரிடம், தாங்கள் மண்ணாண்ட மக்கள் என்ற தன்னம்பிக்கையூட்டி, அவர்களை இனத்தால் தமிழர் என்று அணி திரட்டி— பொருளியல் அரசியல் பண்பாட்டியல் துறைகளில் ஆக்க மூட்டி ஆள்வினையையும் கூட்டி— தற்கால உலகில் பிற இனத்தா ரோடும் நாட்டாரோடும் போட்டியிட வல்ல உளத்தியலையும் ஊக்கத் தையும் வளர்க்காமல், அரசின் கையையே எதிர்பார்த்து நிற்கின்ற இயலாமை நிலையினையே சலுகை-இடவொதுக்கீட்டு அரசியல் வளர்த்துவிட்டுள்ளது.

தமிழர்களில் சிறு விழுக்காட்டினர் மட்டும் பெறவல்ல அரசு வேலைகளுக்கான இடவொதுக்கீடு, தமிழர்கள் அனைவருக்குமே ஓர் அமுதசுரபி என்னும் கொடிய மாயை தோற்றுவிக்கப்பட்டுள்ளது.

சாதி ஓர்மையே அரசியல் என்றாக்கப்பட்டுள்ளது. சலுகை களுக்காகவும் இடவொதுக்கீட்டுக்காகவும் போராடுவது மட்டுமே விடுதலைக்கான பெருவழி என்னும் கருத்தியலே விதைக்கப்பட்டு வருகின்றது. தில்லி அரசிடம் கையேந்தி நிற்கும் இரவலர் இனமாகத் தமிழரினமே இழிவுபடுத்தப்பட்டு வருகின்றது.

திருவோட்டு அரசியலின் நீட்சியாகிய மண்டல் ஆணையப் பரிந்துரைகளின் விளைவாக, தமிழகத்தில் இந்தி(ய) ஆட்சிப்பணி (IAS) அதிகாரிகளாகவும் பிற அதிகாரிகளாகவும் மாவட்ட ஆட்சியர்களாக வும் நடுவணரசு அலுவலகங்களிலான அதிகாரிகளாகவும் வைப்பக (வங்கி) அதிகாரிகளாகவும் தாய்த்தமிழகத்தில் அமர்த்தம் பெறப் போகி றவர்கள் தமிழகத்தைச் சேர்ந்த பிற்படுத்தப்பட்டோராக இருக்க மாட் டார்கள். வடவரிலும் வடுகரிலும் பிற்படுத்தப்பட்டோரே அதனால் பயன்பெறப் போகின்றனர். தமிழகத்தின் ஆட்சித்துறைகளில் பிற மாநிலங்களைச் சேர்ந்த கீழ்ச்சாதியினரே அதனால் அரசுப்பணிகளில் அமர்த்தம் பெறப்போகின்றனர். காலம் இதனை மெய்ப்பிக்கத்தான் போகிறது.

தீமையிலும் சிறிய நன்மையுண்டு; நன்மையிலும் சிறிய தீமை யுண்டு என்பது இயங்கியல். இதனால், சலுகை-இடவொதுக்கீட்டு அரசியலால் சிறிதளவும் நன்மையே இல்லையென்று கூறவில்லை. ஆனால் அந் நன்மை, மிகச் சிலருக்கு மட்டுமே என்றாவதையும், அவர் களிலும் கன்னடரும் தெலுங்கரும் வடவருமே பெரும்பாலோர் என்ப தையும் — அப்படிப் பயன்பெறுவோர்களிடமும் புதிய பிராமணிய மயக்கங்களே புற்றீசலைப்போல் பெருகி நிற்பதையும் — நாம் கருத்தில் கொள்ளத்தான் வேண்டும்.

தமிழகத்திலிருக்கும் தெலுங்கரின் நலன்களே சாதிச் சலுகைப் போராட்டங்களை அவ்வப்போது உசுப்பிவிட்டுத் திரைமறைவி லிருந்து ஆட்டுவித்து வருகின்ற மெய்ம்மையைத் தமிழர்கள் உணர வேண்டும். இந்த ஓர்மையைத் தமிழர்கள் எய்திவிடக் கூடாது என் பதில் வந்தேறிகளெல்லாம் மிக விழிப்புடன் இருந்துவருகின்றனர்.

**அழகுமுத்துக் கோன் சேர்வை** ஒரு தூய தமிழர். எட்டைய புரம் பாளையத்தின் படைத்தலைவராக இருந்தவர். 1759ஆம் ஆண் டில் ஆங்கிலேய வந்தேறிகளை எதிர்த்துப் போரிட்டதனால், அவர் சிறைபிடிக்கப்பெற்றுச் சுட்டுக்கொல்லப்பட்டார். அவரது பெயரில் உள்ள **கோன்** என்ற சாதிப் பட்டத்தை 'யாதவ்' என்று இந்திமொழியில் போலியாக மாற்றிக்கொள்ளும் அளவுக்குத்[70] தூய தமிழராம் இடையர் குடியினரைத் தமிழரினத்திலிருந்தே பிரித்திட ஒரு பெரிய சூழ்ச்சி நடந்துவருகிறது. கோனார்கள் வடஇந்தியாவிலிருந்து தமிழகத்திற்கு வந்தவர்கள் என்னும் ஒரு பொய்யான வரலாறும் உளத்தியலும் அவர் களின்மீது வலியத் திணிக்கப்பட்டு வருகின்றது.

இது போன்ற பெருங்குறும்பிற்குத் தமிழகத்தில் தெலுங்கு இடை யரும் கன்னட இடையருமான வந்தேறிகளே காரணம் என்பதை



எம் தமிழ் மக்கள் உணரத்தாம் போகின்றனர். 'யாதவ்' என்ற சங்கதப் பெயரை வலியத் திணிப்பதன் வாயிலாகத் தூய தமிழராம் இடையர் குடியினரையும் மெல்லப் பிராமணமயமாக்கிச் சாதிவழியில் அவர் களைத் தமிழரிடமிருந்து பிரித்து வேறாக்க முயல்கின்றனர். வடுகர்கள் இது போன்ற சித்துவேலைகளில் இறங்கியுள்ள உண்மை அவர்களுக்கு ஒருநாள் விளங்கத்தான் போகிறது. சாதிகளை வைத்துத் தமிழினத் தைக் குலைக்கவும் கெடுக்கவும் செய்துவரும் வடுகச் சூழ்ச்சிக்கு ஒரு முடிவுக்காலம் உண்டு என்பது உறுதி.

ஈ. வெ. இரா.வின் திராவிடக் கொள்கையை வாயாரப் போற்றி நிலைப்படுத்திய சாதிவழிச் சலுகை-இடவொதுக்கீட்டு வினையால் வந்ததே இந்த அழிம்புப் போக்கு.

எவ்வாறாயினும், நம்மை இனத்தால் சுரண்டிக் கொழுத்துவரும் இந்தி(ய) ஆளவந்தாரிடமே கைநீட்டி இரந்துண்ணும் உளத்தியலை நிலைப்படுத்த வேண்டுமா? 'ஆண்ட இனமடா எம்மினம்' என்பதைக் காட்டித் தமிழ் மக்களிடம் தன்னம்பிக்கையையும் ஆள்வினையையும் வளர்க்க வேண்டாமா? சலுகை-இடவொதுக்கீட்டு அரசியலால் தமிழரிடையே எந்த அளவுக்குத்தான் சாதி ஒழிந்துவிட்டது?

தமிழகத்தின் தலைநகராகிய சென்னையிலும்கூடப் படித்துப் பட்டம் பெற்று முன்னேறி அதிகாரிகளான பழந்தமிழராம் மறை யரும் மள்ளரும் மேல்சாதியினர் வாழும் தெருக்களிலும் குடியிருப்பு களிலும் இன்னமும் எளிதில் வாடகைக்கு வீடு எடுக்கவும் இயலாத நிலை, எண்பது ஆண்டுக்காலத் திராவிட இயக்க வரலாற்றிற்குப் பின்னரும்கூட நீடிக்கின்றதே!

ஆனால் திராவிட அரசியலால் கால்கொள்ளவும் இயலாது போன அண்டை நாடுகளான கருநாடகத்திலோ கேரளத்திலோ இந்த அளவுக்குக் நிலைமை கேடுகெட்டதாக இல்லையே! ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோற்றுப் பதம் போதுமன்றோ?

## பொருளியல் வீழ்ச்சி

பழைய சென்னை மாகாணத்தில் இருந்த நயன்மைக் கட்சியின் காலத்தில் தனித்து வளர்வதென்னும் ஒரு நல்ல போக்கு தென்னக முதலாளிகளிடம் தென்பட்டது. பேராயக் கட்சியைப் பிராமணர்-பணியா கட்சியென்று சொல்லி ஒரு கருத்துப்போரை மூட்டிய அக் காலத்திய பின்புலம், தமிழக முதலாளியத்திற்கும் நல்ல ஆக்கமும் ஊக்கமும் அளித்தது.

அந்த நிலையிலும், தமிழகத்திலிருந்த முதலாளிகள் பலர் தெலுங் கர்களாக இருந்தனர். இராசபாளையத்திலும் கோவையிலும் அத்

தெலுங்கர்கள் நன்கு காலூன்றிக் கொழுத்தனர். தமிழகத்தின் தொழில் முனைவோர்களாக அவர்கள் நல்ல ஏற்றம் பெற்றனர். பேராயக்கட்சி ஆட்சியிலும் நல்ல பயன்பெற்றனர்.

ஆனால், திராவிட இயக்கத்திற்கும் மார்வாடிகளுக்கும் இடையில் ஏற்பட்ட கள்ளவுறவால் மார்வாடிகளின் எண்ணிக்கை மட்டுமன்றி, அவர்களுடைய முதலீடுகளும் பெருத்தன. யாதோர் இடருமின்றிச் சுரண்டவல்ல களமும் நிலமும் தமிழகமேயென மார்வாடிகளும் குசராத்தியரும் பிற வடவரும் மெல்ல உணர்ந்தனர். எழுச்சி பெற்றுவந்த தமிழ் முதலாளியம், இதனால் மெல்ல மெல்ல மார்வாடிகளின் கொடும் வாய்க்குத் தீனியாகியது.

தமிழகப் பொருளியல் மீதான தனது கொடும்பிடியை இந்தி(ய) வல்லரசு இறுக்கி நெருக்க நெருக்க, தமிழ் முதலாளிகளின் தொழில் முனைவு மெல்ல முடமாக்கப்பெற்றது. எந்த ஒரு குறுந்தொழிலைத் தொடங்க நினைத்தாலும், தில்லிக் கொலுவின் இசைவைக் கேட்டுத் தவங்கிடக்க வேண்டியுள்ளது.

கையூட்டுகளை அள்ளியள்ளி ஆளவந்த அதிகார வகுப்பின் தொந்திக்குள் துருத்த வேண்டியுள்ள நிலையில், மார்வாடிகளையும் குசராத்தியரையும் போன்ற வடக்கத்திய வந்தேறிகளின் வெறிபிடித்த தொழிற்போட்டிக்கும் வணிகச் சூழ்ச்சிகளுக்கும் எம் தமிழ் முதலாளிகளால் ஈடுதர முடியவில்லை.

மேலும், ஒரு தொழிலையோ வணிகத்தையோ தொடங்கியவுடனேயே, மார்வாடிகள் அதனுடைய மொத்த முகவாண்மையையுமே (Agency) தம்முடைய மார்வாரிக் குழுகத்தவருக்கு மட்டுமே தந்துவருகின்றனர். உள்முகவாண்மைகள் அவர்களுக்கும் கீழே இருக்கின்ற தெலுங்கு, கன்னடத் தரகு முதலாளியர்களுக்கே தரப்படுகின்றன.

இங்குமங்கும் சில்லறை வணிகத்தில் மட்டுமே முதலீடு செய்யும் வாய்ப்பிருந்த தமிழரும்கூட அதை மெல்ல மலையாளிகள் போன்ற வந்தேறிகளிடமே இழந்துவருகின்றனர். பெட்டிக்கடைகள்கூட மலையாளிகளுக்கென்று ஆகிவிட்டன !

உரிமங்கள் மட்டுமன்றி, மூலப்பொருள் ஒதுக்கீடு, ஏற்றுமதி இறக்குமதி வாய்ப்புகள், வங்கிக் கடன் போன்ற உரிமைகள் யாவும் இந்தி(ய) வல்லரசிடமே தில்லியில் குவிக்கப்பட்டிருக்கின்றன. இதனால், தமிழர்கள் நல்ல தொழில்முனைவோராக ஆகின்ற வாய்ப்புகள் அரிதாகிவிட்டன. இவை எல்லாவற்றையும் மார்வாடிகள் போன்ற வடவர்களே எளிதில் பெறுகின்றனர்; பணமுதலீட்டிலும் தொழில் முதலீட்டிலும் வணிக முதலீட்டிலும் முன்னணி நிலையை எய்தி,



முற்றுடைமை உரிமையையும் பெற்றுவிடுகின்றனர். தமிழர்களோ, எதையும் பெறவியலாது, முடங்கிக் கிடக்கின்றனர்.

தமிழ் முதலாளியரே இன்று மார்வாடிகளிடமும் தெலுங்கர்களிடமும் பிறரிடமும் பெரிய கொத்தடிமைகளாகி வருகின்றனர். தொழில் உரிமம் வழங்குவதிலும், இடுபொருள் பங்கீட்டிலான முற்றதிகாரத்திலும், வைப்பகக் (வங்கிக்) கடன் வழங்குவதிலும், ஏற்றுமதி இறக்குமதி உரிமங்களை வழங்குவதிலும் தில்லியில் குந்திக் கொண்டிருக்கும் இந்தி(ய) வல்லரசினுடைய அதிகார வகுப்புக் கொடும்பிடி தளர்ந்து, அதனுடைய தமிழரின எதிர்ப்பு உளத்தியல் மாறினாலன்றி, தமிழ் முதலாளியம் மீண்டும் தலையெடுக்கவே முடியாது. இன்றைய பிராமண-பணியா ஆட்சியமைப்பில் தலைகீழாக நின்றிடினும் அது நடக்கப்போவதில்லை.

தனியார் வங்கிகளை யெல்லாம் இந்தி(ய) அரசு அரசுடைமையாக்க வேண்டுமென்று தமிழகத்துப் பொதுவுடைமையரும் பிறரும் பல்லாண்டுகளாகக் கூப்பாடு போட்டுவந்தனர். இதனால் தமிழக முதலாளிகள் தமிழகத்தில் தோன்றுவித்த இந்தியன் வங்கி, இந்தியன் ஓவர்சீசு வங்கி முதலான வங்கிகளையும்கூடத் தில்லி வல்லரசே எடுத்துக்கொண்டு, அவற்றை இந்தி(ய)மயமாக்கியது. தமிழ் முதலாளிகளின் சொந்தப் பணமுதலீடுகள் வளர்ந்து தமிழகத்து நாட்டுவங்கித் துறை சொந்தமாக முன்னேறவும் உறுதிப்படவும் இருந்திட்ட அரிய வாய்ப்புகளை யெல்லாம் தமிழ் முதலாளியம் இதனால் இழந்தது.

தமிழகத்தில் விளங்கிவந்த வங்கி முதலீட்டின் பெரும்பகுதி தில்லிப் பேரரசின் அதிகார வகுப்பிடம் கைமாறியதால், தமிழகத்தின் வளர்ச்சிக்குத் தில்லி வழியாகக் கிடைத்துவந்த வங்கிக் கடனுதவிகள் அருகின. அத்தகைய வாய்ப்புகள், தமிழகத்தில் வந்தேறிய வடக்கர்களுக்கு மட்டுமே பெருமளவில் கிடைத்ததன் வாயிலாகத் தமிழகத்தின் தொழில்துறையும் வணிகத்துறையும் அந்த வடக்கராம் இடக்கரிடம் கொத்தடிமையாகின.

அதுபோக, தமிழகத்திலுள்ள அடிமட்டப் பட்டிதொட்டிகள் வரையில் நீண்டுள்ள தில்லிப் பேயரசின் அதிகார வகுப்பு வங்கித் துறை, அங்கு அரும்பிடும் சின்னஞ்சிறு வைப்பீடுகளையும் (deposits) நேரடியாகச் சுரண்டி, தில்லிக்கு மூட்டை கட்டிக்கொண்டு போகவே வழி பிறந்தது.

இதனால் தமிழ்த் தேசத்தின் மீதான இந்தி(ய)த் தேசிய இனச் சுரண்டல் பெருத்தது. வங்கிகளை யெல்லாம் அரசுடைமையாக்கக் கேட்டுத் தமிழகத்திலுள்ள 'முற்போக்குகள்' போட்ட காட்டுக் கூச்சலே

இத் திருப்பணிக்கான பெரிய ஊக்கமாயிருந்தது. தமிழ்த் தேசிய நலன்களுக்கு எதிரான இந்தி(ய)ப் பெருமுதலாளியத்தின் ஐந்தாம் படையினரே இம் 'முற்போக்குகள்' என்பதும் மெய்ப்பட்டுள்ளது.

உணவுக்கூலக் கொள்முதல் முதல் அதன் அகவிலையைத் தீர்மானிப்பது வரையில் எல்லாமே தில்லி வல்லரசின் முற்றுரிமையாக ஆக்கப்பட்டுள்ளது. பயிர் வித்துகளின் பங்கீடு முதல் உரப் பங்கீடு வரையில், எல்லாமே அந்தப் பேயரசிடமே இருக்கின்றன. இதனால், தமிழகத்தின் வேளாண்துறையும் தில்லிக் கொலுவுக்குக் கொத்தடிமையாகியுள்ளது.

போதாமைக்கு, உலக வங்கி திணித்துள்ள தங்கெல் திட்டத்தினால் இந்தி(ய)த் தரகு முதலாளியரின் வழியாகத் தமிழக வேளாண் துறை முழுவதுமே உலகச்சந்தையோடு இணைக்கப்படவிருக்கின்றது.

நெல் செழித்து வளரும் நன்செய் நிலங்களையெலாம் திட்டமிட்டுக் காசுப்பயிர்களை விளைவிக்கின்ற கழனிகளாக்கி, உணவு விளைச்சலில் தமிழகத்திற்கிருந்த தற்சார்பு நிலையைக் கெடுக்கும் சூழ்ச்சியே இந்தி(ய) வல்லரசின் வேளாண் கொள்கையாக இருந்து வருவது ஊரறிந்த குட்டு. தமிழகத்து வேளாண்மைப் பொருள்களின் மொத்த வணிகத்திலும் மார்வாடிகளும் பிறரும் புகுந்து மேலாண்மை பெற்றுவிட்டனர்.

ஆங்கிலேயராட்சியை எதிர்க்கையில், இங்கிருந்துகொண்டு சென்ற பஞ்சை நூலாக்கி நெய்து துணியாக்கி மீண்டும் நம்மிடமே வந்து அதைப் பன்மடங்கு விலை கூட்டி விற்றுவந்த மெய்ம்மையைப் பேராயக்கட்சியினரும் பிறரும் வாய்கிழியச் சுட்டிக்காட்டி வந்தனர். ஆனால், அதேபோன்று, தமிழகத்திலிருந்த பஞ்சாலைகள் பெரும்பாலானவற்றை வெறும் நூற்பாலைகளாக முடக்கிய வடவர்கள், தமிழகத்திலிருந்து கொண்டுசென்ற நூலை ஆமதாபாத்திலோ பம்பாயிலோ நெய்து துணியாக்கி, மீண்டும் தமிழகத்திற்குக் கொண்டுவந்து பன்மடங்கு விலையைக் கூட்டி விற்பது மட்டும் என்னவாம்?

அதுபோக, தமிழ் முதலாளிகளிடமிருந்த பஞ்சாலைகள் இன்று முழுவதுமாய் மார்வாடிகள், குசராத்தியர்கள், தெலுங்கர்கள் ஆகியோரின் கைகளுக்குப் போய்விட்டன. தமிழர்களில் பெருமுதலாளியராயிருந்த கருமுத்துத் தியாகராயச் செட்டியார் குடும்பம், முத்தையா செட்டியார் குடும்பம், ஆர். கே. சண்முகம் செட்டியார் குடும்பம் போன்றனவெல்லாம் இன்று மார்வாடிகள், குசராத்தியர், பார்சிகள் போன்ற வடக்கத்திய முதலாளியத் திமிங்கலங்களால் அடக்கியொடுக்கப்பட்டுக் கிடக்கின்றன.



தமிழர்களான நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் நடத்திவந்த வட்டித்தொழிலையும் மார்வாடிகள் வேரறுத்துவிட்டனர்.

தமிழகத்தின் தீப்பெட்டித் தொழில் முழுவதுமாய் மார்வாடி முதலான வடவருக்கே உடைமையாகிவிட்டது. வேதியல் பொருள் (Chemicals) ஆக்கம், பொறியியல் (Engineering) தொழில், சருக்கரை ஆலைகள், இழுவைத் (Rubber) தோட்டங்களும் தொழிலும், உணவுப் பொருள் ஆக்கத்தொழில், சாலை ஊர்தித் தொழிலகங்கள், பாக்குத் தொழில், உப்பளங்கள், சமையல் எண்ணெய்த் தொழில், சமையல் வளித் தொழில், பல கோடிகள் புழங்கும் திரைப்படத் தொழில், வார்ப்பாலைகள், வெள்ளிரும்புத் தொழில், பைஞ்சுதை (சிமிட்டி) ஆலைகள், வேளாண்கருவி ஆக்கத்தொழில், மீன் கருவியாக்கம், ஆலைத்துணியில் மொத்த வணிகம், பின்னலாடைத் தொழில், கடல்வள ஆக்கம், பற்றாசுப் பொருளாக்கத் தொழில், மருந்துத் தொழில், கருப்புக்கல் தொழில், காட்டுப்பூ விற்பனை, தேயிலை, குளம்பி (காப்பி), தேக்கு மரத் தோட்டங்கள், வானூர்தி நிறுவனங்கள், கடன்வழங்கு நிறுவனங்கள், கணிப்பி நிறுவனங்கள், சுற்றுலாத் துறை ஆகிய அத்துணைத் துறைகளுமே இன்று மார்வாடிகள், குசராத்திகள், பார்சிகள், சிந்திகள் போன்ற வடவரின் கைகளில் சிக்குண்டுவிட்டன.[71] தமிழகத்திலான சிறிய பெரிய தொழில்கள் எல்லாமே வடவரின் முற்றுடைமையாகிவிட்டன. அதற்கு அடுத்த நிலையில் இருப்பவர்கள் தெலுங்கர்கள், கன்னடர்கள் முதலானோர்.

தமிழகத்திலுள்ள தொழிலகங்களிலெல்லாம் தமிழரல்லாதோருக்கே வேலைவாய்ப்புகளில் முன்னுரிமை! குறிப்பாகத் தெலுங்கர்கள் நடத்தும் தொழிலகங்களில் தெலுங்கர்களுக்கே முன்னுரிமை என்பது எழுதப்படாத சட்டமாம்! கோவையிலுள்ள தெலுங்கருக்குச் சொந்தமான ஆலைகளுக்கு வேலை தேடிச் செல்பவர்கள் தெலுங்கர்களாக இருந்தால்தான் ஆலைவாசலுக்குள்ளே நுழைய முடியுமாம்! அவ்வாறு ஆலைவாசலுக்குள் நுழைய இசைவுபெற்ற தெலுங்கர்கள், அடுத்து ஆலை அலுவலகம் வரை சென்ற பின்னர், அவர்களில் கம்மவாருகள் மட்டும் உடனே வேலைக்கு அமர்த்தப்படுவராம்! அவ்வாறு கம்மவாரு அல்லாதோரெல்லாம் இரண்டு மூன்று நாட்களுக்குப் பின்னர் வருமாறு ஆறுதல் சொல்லி அனுப்பப்படுவராம்!

தமிழகத்திலுள்ள நடுவண் தொழிலகங்களில், மேலாண்மை எல்லாம் வந்தேறிகளின் தனியுரிமை! ஆனால், தமிழர்கள் நிறுவிய நகராகிய பெங்களூரிலுள்ள நடுவணரசுத் தொழிலகங்களில், கன்னடருக்கு மட்டுமே வேலைவாய்ப்பு என்று வரையறுத்த சரோசினி மகிசியினது திட்டத்தைத் தலைமேல்கொண்டு, கருநாடக அரசு

கன்னடர்களுக்கு மட்டுமே வேலைவாய்ப்புகளை உறுதிப்படுத்தி வருகின்றது. தமிழருக்கு **மட்டும்** வேலை இல்லை என்ற நிலை வந்து விட்டது.

தலைநகராம் சென்னையைத் தலைமையகமாகக் கொண்ட தென்னகத் தொடர்வண்டித் துறை முழுவதுமே மலையாளிகளின் முற்றுடைமை போலும்!

தமிழகத்திலுள்ள நடுவணரசு ஆலைகளிலும் அலுவலகங்களி லும் தமிழரைப் பார்ப்பதும் தமிழைக் கேட்பதுமே அத்தி பூத்தாற் போல் அரிதினுமரிது! ஆனால், ஆந்திரத்திலோ கருநாடகத்திலோ கேரளத்திலோ உள்ள நடுவணரசுத் தொழிலகங்களிலும் அலுவலகங் களிலும் அவரவர் மாநில மொழிகளே எங்கும் கோலோச்சுகின்றன. தமிழகத்தின் இத்தகைய அவலம் ஆங்கிலப் பித்தேறிய இழவெடுத்த திராவிடக் கழகங்களால்தானே வந்தது?

ஒருக்கலித்து வைத்துள்ள கதவுகளுக்குப் பின்னாலிருந்து மார் வாடிகள் அவ்வப்போது போடுகிற சல்லிக்காசுகளைச் சேர்த்தாலே கோடி கோடியாய்த் தேறிவிடுமெனக் கணக்கிட்டுக் கொண்ட திரா விடங்கள், வடவரிடம் போய் நாய்போல் வாலைக் குழைத்து நிற்கும் பணியைச் செவ்வனே செய்துவருவதே ஒரு தனிப்பாங்கு!

## உதிரித்தனம்

சேரிகளில் உழலும் உதிரிப் பாட்டாளியரை அடிப்படையாகக் கொண்டுள்ள கழகங்களுக்குக் கள்ளச் சாராயம் வடிக்கும் குடிசைத் தொழிலைப் பேணி வருவதைத் தவிர வேறெந்தத் தேசியத் தொழிலை யும்பற்றித் தெரியாது. சாராய மன்னர்களான உதிரி முதலாளிகளே அவர்கள் வளர்த்துவிட்டுள்ள தேசிய முதலாளிகள்! மற்ற எல்லாத் தொழில்களையும் அக் கழகங்கள் தெலுங்கருக்கும் மார்வாடிகளுக்கு மென நீரட்டிக் கொடுத்துவிட்டன!

தமிழகத்தின் தேசியத் தொழிலாகக் கழகங்கள் வளர்த்தெடுத்த கள்ளச் சாராயத் தொழிலில், நாளைக்கு மார்வாடிகள் புக மாட்டா ரெனக் கூறவியலுமோ?

தமிழகத்தில் இன்று தரகு முதலாளிகளாய்க் கிடந்து மார்வாடி களுடனும் பிற வடவருடனும் சேர்ந்து இந்துவெறிக் கொள்கைக்கு நல்ல தீனிபோட்டுக் கொண்டிருக்கின்ற டீ. வி. சுந்தரம், சேசசாயி, ஈசன், டீ. டீ. கே. குழுமத்தினர் என்ற தமிழ்ப் பிராமணத் தரகுப் பெரு முதலாளிகளையாவது அந்த மார்வாடிகள் விட்டுவைக்கப் போகின் றனரா என்ன?



தமிழரினமே யாதொரு தொழில்முனைவும் அற்றதோர் இன மாக — சொந்த ஆள்வினை இல்லாத இரவலர் கூட்டமாக — ஆக்கப் பட்டுள்ளது. தொழில்முனைவு இல்லாத ஓரினம் வரலாற்றில் தலை யெடுக்கவே முடியாது. ஆண்டை அரசை எதிர்பார்த்துக் கெடுகின்ற செயலின்மையும் தற்சார்பின்மையும் ஒழிய வேண்டும். தமிழரிடத் திலே தொழிலூக்கத்தை ஒரு பண்பாடாய் உருவாக்கத் தமிழரின ஓர்மையும் தமிழ்த் தேசிய விடுதலை வேட்கையும் நல்ல வழியும் வாய்க் காலுமாகும். இல்லையெனில், தொழிலில் தமிழகம் தற்சார்பை எய்த முடியாது.

## குலைகுலையாய்க் கறுப்புப் பணம்!

இந்தி(ய) வல்லரசின் வரிக்கொள்கையும் மார்வாடிகள், குசராத் தியர்கள் முதலான வடவருக்கே நன்மை பயக்கின்றது. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் நடுவணரசின் வரவுசெலவில் மிகச் சிறிய பங்கையே வகித்துவந்த வருமான வரி, இன்று இந்தி(ய) வல்லரசின் வருவாயில் 5 முதல் 6 விழுக்காடாக இருக்கிறது. வருமான வரி, சொத்து வரி, விற்பனை வரி ஆகிய வரிகளை யெல்லாம் ஏய்ப்பதையே ஒரு கைவந்த கலையாகவும் துணிச்சலான பண்பாடாகவும் பெரும்மரபாகவும் கொண்டுள்ள மார்வாடிகளிடம் கருப்புப் பணம் வற்றாத ஊற்றாகிக் குவிந்துவருகின்றது.

தமிழகத்தில் நிலபுலம் முதலான அசையாச் சொத்துக்களை அடுக்கடுக்காக வாங்கிடவும், வானைத் தொடும் ஆடம்பரக் கட்டடங் களை எழுப்பவும் இந்தக் கள்ளப்பணமே மார்வாடிகளின் கருவியாகி யுள்ளது. இந் நிலையில், சூதாட்ட முதலீடு என்ற வடிவில், தமிழகத்து மண்ணாகிய வளமான வேளாண் நிலங்களை மிக மலிவாக வாங்கி அவற்றை வீடுகட்டும் மனைக்கட்டுகளாக்கிடக் கூறுபடுத்திவருகின் றனர். அவற்றை வாங்கி விற்று ஊதியம் பெருக்குவதன் வாயிலாகத் தமிழ்மண்ணே இன்று கற்பழிக்கப்பட்டு வருகின்றது. கழகங்களின் ஆட்சிக் காலத்திலேயே இத்தகைய சூதாட்டம் ஆழ்ந்து அகலமாகியது. மனைக்கட்டு விற்பனை என்ற சூழ்ச்சியைக் கொண்டு தமிழ்நிலத்தைக் கூறாட ஊக்குவித்து வருபவர்கள் தெலுங்கர்களும் வந்தேறி மார்வாடி களுமேயாவர்.

இந்தியாவிற்கு அப்பால் வாழ்ந்துவரும் 'இந்தி'யர்களிடமுள்ள 'டாலர்'களைக் கவர்வதற்கென்று தமிழகத்தில் அமைக்கப்பட்டுள்ள விடுமுறை மனையூர்களில் (holiday resorts) வீட்டுமனைகளை மிக மிக மலிவாக வாங்க வகுத்துள்ள திட்டங்களும் புற்றீசலைப் போலக்

கிளம்பியுள்ளன. தமிழகத்தின் மண், இன்று உலகளாவிய தொரு விற்பனைப் பண்டம்!

தமிழகத்திற்குள் உள்ள அசையாச் சொத்துகளைப் பதிவதற்குத் தமிழக அரசுக்கு ஒருவர் கட்ட வேண்டிய முத்திரைத்தாள் கட்டணம், சொத்து மதிப்பில் 12 விழுக்காடாகும். ஆனால், கேரளத்தில் அஃது 6 விழுக்காடாக மட்டுமே இருக்கின்றது. இதனால் கேரளத்தில் ஓரிரு துண்டு (செண்ட்) நிலம் சொந்தமாக இருந்தால் போதும்; தமிழகத்தில் பெரிய அளவில் நிலத்தை வாங்கி, அதனைக் கேரளத்தில் குறைந்த பதிவுத்தாள் கட்டணம் செலுத்தி எளிதில் பதிந்துகொள்ள முடியும்.[72]

காசுமீரம் தவிர்த்த பிற இந்திய மாநிலம் எதிலும், இன்னொரு மாநிலத்திலுள்ள ஓர் அசையாச் சொத்தைப் பதிந்து கொள்ள முடியும். தமிழ்மண்ணைத் தமிழர்களே சிறிய பெரிய தொகைகளுக்கு மலையாளிகளுக்கு நீரட்டித் தருகிறபோது, அந் நிலத்தை வாங்கி அதை அவர்கள் இன்னொரு மாநிலத்திற்குச் சென்று தம் பெயரில் பதிந்து கொள்ளும் போக்கும் பரவலாகி வருகிறது. தமிழ்மண்ணைத் 'திராவிட' அயலார்கள் பெருமளவில் வாங்கி மண்பறிப்பும் மடிபறிப்பும் செய்வதும் முனைப்புடன் நடந்தேறிவருகிறது.

தமிழரின் மண்ணுரிமையை எந்த வகையிலும் காக்கவியலாத் தமிழக அரசின் கயமையைக் கண்டு, புலம்புவதைத் தவிர வேறு வழியில்லை.

## புரட்சிப் பூச்சாண்டி!

மார்வாடிகள், குசராத்தியர்கள் போன்ற வடஇந்தியப் பெருமுதலைகளின் பொருளியல் நலன்களைப் 'புரட்சி' வழியில் இலைமறை காயாகப் பேணி வரும் தமிழகப் பொதுவுடைமை இயக்கத்தில் பல்வேறு கிளை ஓடைகள் உண்டு. மூப்பனார், வாண்டையார் முதலான தமிழ்ப் பெருநிலவுடையார்களிடம் இத்தனை ஆயிரம் குறுக்கம் (ஏக்கர்) நிலம் உண்டெனப் பட்டியல் போட்டுக் காட்டிப் பேசவும் எழுதவும் தெரிந்த இவர்களுக்கு, டாட்டாவும் பிர்லாவும் கோயங்காவும் போன்ற வடநாட்டுப் பெருமுதலாளியப் பேய்களும், அவர்களை அடுத்து வரும் வடுகப் பெருமுதலாளிகளும், அத் தமிழ் நிலவுடையார்களைவிடப் பன்மடங்கு பெருமளவில் நிலபுலங்களை வாங்கிப் பெருந்தோட்டங்களாக்கிக் காசைப் பெருக்கி வருவது மட்டும் பெரிதாகப் படாது. ஆனால், தமிழர்களில் மிகச் சிலரான செல்வர்கள் மட்டுமே இவர்களின் கண்களை உறுத்துவர். இந்தப் 'புரட்சி'களுக்கு எப்போதுமே தமிழர் காமாலை! தமிழரல்லா முதலாளியர்மீது அவர்களுக்கு அவ்வளவு பெரிய காழ்ப்போ கடுப்போ கிடையாது.



அதற்காக, தமிழர்களில் பெரிய நிலவுடையார்களையும் தரகுப் பெருமுதலாளியரையும் எதிர்த்துப் போராடவே வேண்டாமெனச் சொல்லவில்லை. தமிழகத்தின் தேசிய விடுதலைக்கு எதிராகச் செயல்பட்டு இந்தி(ய) வல்லரசுக்குத் தமிழரினத்தின் தேசிய நலன்களையும் தனிநாட்டுரிமையையும் வெட்கமின்றிக் காட்டிக்கொடுத்துவருகிற தமிழ்த் தரகு முதலாளியரையும் பிற வகுப்புத் தரகர்களையும் தண்டிக்கத்தான் வேண்டும். தமிழகத்தின் சிறிய பெரிய முதலாளிகளையும் சேர்த்து ஒட்டுக்காகத் தமிழரினத்தையே அடிமைப்படுத்தி அடக்கியொடுக்கிச் சுரண்டிவரும் வடவர்களின் தேசிய இன ஒடுக்கலையும் அடக்குமுறையையும் உடனடியாக ஒழிப்பதென்பதே தமிழக விடுதலை அணிகளின் தலையாய கடனாகும். தமிழருக்குள் இருக்கிற முரண்பாடுகளைப் பின்னால் தீர்த்துக்கொள்ளலாம்.

தமிழரில் செல்வர்களை மட்டுமே நோக்கி விரலைச் சுட்டுகிற மார்க்சிய-இலெனியப் 'புரட்சிகள்', தமிழகத்திலிருக்கும் தெலுங்கர் போன்ற பெருவுடைமையர்களைப்பற்றி மட்டும் முடிந்த அளவுக்கு மூடிமறைப்பதற்குக் காரணம், அவர்களின் 'புரட்சி'த் தலைமைகளில் தமிழரல்லாதோரே வலுவாக இருப்பதேயாகும். இதனாலேயே பம்பாயிலும் பெங்களூரிலும் செம்மையாக வாழ்ந்து வருகின்ற (நேற்றுவரை 'காணாமை' என்னும் கொடுமைக்குள்ளாகி நின்ற) நாடார்களில் சில பத்து சிறிய நடுத்தரத் தமிழ் முதலாளியர் மட்டுமே இவர்களின் கண்களை உறுத்துவர்.

இன்று தமிழகத்தில் பெரும் 'புரட்சி'களாயுள்ள தெலுங்கருக்கும் மலையாளியருக்கும் இருக்கிற இன ஓர்மையையும் ஒற்றுமையையும் பற்றிச் சொல்லியாத் தெரிய வேண்டும்? இன ஓர்மை அவர்களிடம் அடிமட்டம் வரையில் ஆழப் புரையோடிக் கிடக்கிறது.

தெலுங்கர்களாகிய நாயுடு சாதியினர் நான்கு மறையர் இளைஞர்களை 1992 மார்ச்சுத் திங்களில் வெட்டிப்போட்டுப் பச்சையாகப் படுகொலை செய்தபோது, அதே ஊரைச் சேர்ந்த தெலுங்கர்களான சக்கிலியர்கள், சாதி ஒருமைப்பாட்டின் அடிப்படையில் அங்குள்ள மறையர்களின் பக்கம் நிற்காமல், தம் சொந்த இனத்தவரான தெலுங்கு ஆண்டைகளின் பக்கம் நின்றதும் அதனால்தானே? இதுதானே அத் தெலுங்கரிடம் ஆழப் புரையோடியுள்ள இனவுணர்வு? இது போன்ற இனப்பற்று, தமிழரல்லா அந்தப் புரட்சிகளிடம் இல்லாமலா போகும்?

'இந்தி'யம் என்றும், 'திராவிடம்' என்றும், 'இந்து' என்றும் பேசித் தமிழகத்திலேயே தமிழர்களை ஏமாற்றிவந்த தெலுங்கர்களிலும் மலையாளிகளிலும் வேலை வெட்டியற்ற ஒரு பிரிவினரே, 'வருக்கம்' (வகுப்பு),

‘புரட்சி’ என்றெல்லாம் வெற்றுப் பொருளியம் பேசி அரசியல் வணிகம் செய்துவருகின்றனர். ‘புரட்சி’ பேசும் மார்க்சிய-இலெனினியக் குழுக்களின் தலைமைகளில் தெலுங்கர்களும் மலையாளிகளும் அவர்தம் இனநலன்களுமே கொலுவிருப்பதை மறைக்கவே அவர்கள் உருப்படாச் செப்படி வித்தைகளை ஓயாமல் செய்துவருகின்றனர்.

‘வருக்க’ நலன்களையும் ‘வருக்க’ ஒற்றுமையையும் பற்றி இந்தப் ‘புரட்சி’கள் பேசுவதெல்லாம் வெறும் பித்தலாட்டம். தமிழகத்தில் தமிழருக்கிடையில் இன்று தோன்றிவருகிற இனவொற்றுமையைக் கெடுத்து அத் தமிழர்களின் அடிமை மிடிமை நிலைகளை நீட்டித்துத் தத்தம் இனநலன்களை மிகக் கமுக்கமாகப் பேணிக் காத்து நிலைப்படுத்திக் கொள்வதுதான் இவர்களின் உள்ளார்ந்த உளநிலையாகும். தமிழ்த் தேசியம் தமிழர்களிடம் கால்கொள்ளாமல் கெடுக்கவும் தடுக்கவும் இவர்கள் பல்வேறு சித்துவேலைகளைச் செய்துவருவதை இனமானம் மிக்கத் தமிழிளைஞர்கள் விரைந்து உணர வேண்டும்.

## அரசியல் களம் புகுந்தனர்!

தமிழக அரசியலில் மார்வாடிகள் களம் புகச் செங்கம்பளம் விரித்ததும் திராவிட அரசியலேதான்! திராவிட-மார்வாடி கள்ள உறவு காலப்போக்கில் மெல்லத் தலைகாட்டலாயிற்று. தி. மு. க.வின் கோவை மாவட்டச் செயலராக ஆக்கப்பட்டவர், உடுமலை நாராயணன் என்ற மார்வாடி. இவருடைய இயற்பெயர் நாராயண் சிங். 1967ஆம் ஆண்டுத் தேர்தலில் இவர் உடுமலைப்பேட்டையிலிருந்து தி. மு. க. வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்![73] தமிழக அரசியல் களத்தில் முதன்முதலில் ஒரு மார்வாடி சட்டமன்றம் ஏறுவதற்குப் பாட்டை அமைத்துக் கொடுத்ததே திராவிட முன்னேற்றக் கழகம் தான்! **இந்தியன் எக்சுபிரசு, தினமணி** முதலான பெரிய நாளேடுகளைச் சென்னையில் நடத்திவந்த மார்வாடி இராம்நாத் கோயங்கா, பேராயக் கட்சியின் வேட்பாளராக 1952ஆம் ஆண்டில் திண்டிவனம் பாராளுமன்றத் தொகுதியில் நின்று தோற்றதும் உண்டு.

அடுத்து 1980ஆம் ஆண்டுத் தேர்தலில் திண்டிவனம் நகராட்சித் தலைவராக இருந்த ஈராசந்த் என்னும் மார்வாடி, அதே தொகுதியிலிருந்து மாநிலங்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் அவர் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்குத் தாவினார். மதுராந்தகத்திலிருந்து உக்கம்சந்த் என்னும் மார்வாடி நகராட்சித் தலைவராகவும் அ. இ. அ. தி. மு. க. சட்டமன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். பாலாசி என்னும் மார்வாடியும் அதே கழகத்தின் சட்டமன்ற உறுப்பினரானார். திருவண்ணாமலைத் தொகுதியில் விசயக்குமார் என்னும் மார்வாடி சட்டமன்றத் தேர்தலில் வென்றார்.



அடுத்த சில ஆண்டுகளில் தமிழகத்தின் முதலமைச்சராக ஒரு மார்வாடி வந்துவிடுவானோ என்று அஞ்சும் அளவுக்கு அவ் வந்தேறி அட்டைகளின் பெருக்கம் அஞ்சத்தக்கதாக உள்ளது.

திருப்பூருக்கு அடுத்து, சென்னை மாநகரமே மெல்ல ஒரு மார்வாடி நகரமாகி வருகிறது. தமிழகத்தின் தலைநகருக்கே இக் கேடெனின், நம் தாயகத்தின் பிற நகரங்களைப்பற்றிச் சொல்லவா வேண்டும்?

முடை நாற்றமெடுக்கும் நகர்ப்புறச் சேரிகள் பேராயக்கட்சிக் காலத்திலிருந்ததைவிடப் பன்மடங்கு பெருகி விரிந்தன. அந்தச் சேரிகளே கழகங்களின் நாற்றங்கால்கள். அக் கழகங்கள் நாளொரு மேனியாய்ப் பொழுதொரு வண்ணமாய் வளர்த்த உதிரி அரசியலின் (Lumpen Politics) வாக்கு வங்கிகளும் அச் சேரிகள்தான். அந்தச் சேரிகளின் முடிசூடா மன்னர்களாயிருக்கின்ற பெத்த பெருமாள்களும் அரசியல் அடியாட்களும் திராவிட அரசியலின் அதிரடிப்படையின் அணிவகுப்புகளாயினர். தமிழகத்தின் பொதுவாழ்க்கையையே உதிரிமயமாக்கியதில் திராவிட அரசியலுக்கு மிகப் பெரிய பங்குண்டு.

## கயமைக்கு நாட்டாண்மை

தி. மு. கழகம் ஈ. வி. கே. சம்பத்தால் முதன்முறை பிளவுற்றபோது, சம்பத்தின் எதிர்ப்பை முறியடிப்பதற்குக் கருணாநிதியின் அடாவடித்தனமே அண்ணாவுக்கு ஒரு கொழுக்கொம்பாயிருந்தது. சம்பத்தை வீழ்த்தத் திரைப்பட நடிகர்களை ஏவிவிட்ட மு. கருணாநிதி, அதே நடிகர்களாலேயே பின்பு வீழ்த்தப்பட்டார். அண்ணா இறந்தபின் திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய தலைமையைக் கைப்பற்றிக் கொண்ட கருணாநிதி, அந்தக் கழகம் எந்தெந்தக் கொள்கைகளுக்காக நின்றதோ அக் கொள்கைகளையும் நெறிகளையும் ஒவ்வொன்றாகத் தூக்கியெறிந்துவிட்டு, அந்த அமைப்பையே வெற்றுப் பிண்டமாக்கிய ‘கலைஞ’ராவார்.

ஊழலின் தனிநாயகமான இவர், தமிழக அரசியல் மேன்மேலும் கெடுவதற்கு ஆக்கமும் ஊக்கமுமாக இருந்தார். கழக அரசியலில் ஒரு மாஃபியா கும்பலின் தலைவரைப் போலவே செயல்பட்டுவந்தவர் இவரென்று ஆய்ந்தோர் சொல்வதில் தவறொன்றுமில்லை.

பல முறை தமிழகத்தின் முதல்வாராயிருந்த கலைஞர் கருணாநிதியின் ஆட்சிக்காலத்தில் தமிழகத்திற்கு விளைந்த கேடுகள் பல. அண்ணாத்துரையின் அமைச்சரவையில் இவர் பொதுப்பணித்துறை அமைச்சராயிருந்தபோது, தெலுங்குநாட்டினர் ஆந்திர எல்லைக்குள் நகரி ஆற்றின்மீது அரவமும் ஆரவாரமுமின்றி ஓர் அணையைக் கட்டி வந்தனர். அந் நகரியாற்று நீரே சென்னைப் பெருநகருக்குக் குடிநீர்

வழங்கிவந்த ஏரித்துரவுகளுக்கு வந்து சேர வேண்டும். ஆனால், திரா விட ஓர்மையோ தெலுங்குவழியினர் என்ற அடிமனப் பற்றோ கலை ஞரை ஆட்கொண்டதால், ஆந்திரத்தானின் இந்த அடாத அணைத் தேக்கத்தை எதிர்த்து உரிமைக் குரல் எழுப்பி நகரி ஆற்றுநீரின்மீது தமிழகத்திற்கிருந்த உரிமையை நிலைநாட்ட அவர் எந்த முயற்சியும் செய்யவில்லை.

இவரது கயமையால் வந்ததே சென்னையில் அடுத்தடுத்து வரும் தண்ணீர்ப் பஞ்சம்.

1924ஆம் ஆண்டில் கையெழுத்தாகிய காவிரிநீர்ப் பங்கீட்டு உடன்படிக்கையை 50 ஆண்டுகளுக்குப்பின் புதுப்பிக்க வேண்டும் என்பதே ஒப்பந்தம். கருணாநிதியின் ஆட்சிக்காலத்தில் அந்த 50 ஆண்டுகள் நிறைவுற்றன. இதைச் சாக்காக வைத்து இனவெறி பிடித்த கன்னடர்கள், அடுத்தடுத்துப் பல அணைகளைக் கட்டிக்கொண்டனர். அப்போது, இக் கருணாநிதி தம் சுண்டுவிரலையும் அசைக்கவில்லை. மாறாக, தில்லி உச்சவழக்கு மன்றத்தில் தமிழக உழவர்கள் கருநாட கத்தை எதிர்த்துப் போட்ட வழக்கையும் இந்திரா காந்தியின் பொய் யான உறுதிமொழியை நம்பி அவர் திரும்பப் பெற்றுக்கொண்டார். இதனால், காவிரிநீர் தமிழகத்திற்குக் கிடைப்பது குதிரைக்கொம்பா னது. இவருக்குப்பின் வந்த ம.கோ.இராமச்சந்திரனின் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசு, கருநாடக அரசுடன் ஏதோவோர் உடன்பாட்டிற்கு வரவிருந்தது. அதையுங்கூடத் தடுத்துக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கியவர் கருணாநிதி. தமிழக அரசும் கரு நாடக அரசும் கூடிப்பேசித் தீர்வு காண்பது என்ற கன்னடவெறியரின் சூழ்ச்சிக் கருத்தையே திரும்ப ஒப்புவித்து, நிலைமையை மேன்மேலும் குழப்பிக் காவிரிக் கழிமுகம் பாலைநிலமாக வழிகோலியவர் இவர். தாம் செய்த பழிக்குக் கழுவாய் தேட முனைந்ததால், வி. பி. சிங்கின் உதவியால் காவிரி நடுவர் மன்றம் அமைந்தது. இதனாலும், தமிழகம் தேறப் போவதில்லை. "சோழபுரத்தானோ, சூது பெருத்தானோ?" என்பது பழமொழி. தான் பிறந்த சோணாட்டு மண்ணையே பாலைக் காடாக்கிய பொல்லாப் பேர்வழி அந்தக் கருணாநிதி! தமிழகத்தின் உயிரூற்றாகிய காவிரியைக் கன்னடன் மடக்கித் தடுத்துக் கெடுக்க, கருணாநிதியின் 'திராவிடக்' கயமையும் ஒரு பெரிய காரணம்.

தமிழகத்தில் செத்துக் கிடந்த பேராயக் கட்சிக்குப் புத்துயிரூட் டியவர் கலைஞர் கருணாநிதி. "நேருவின் மகளே வருக! நிலையான ஆட்சி தருக!" என்று ஆலம் சுற்றி வரவேற்று, தமிழகத்தில் செத்துப் போய்க் கிடந்த பேராயக் கட்சியை மீட்டு, பின்னர் அந்தப் பேராயக் கட்சியின் சூழ்ச்சியாலேயே நாற்காலியை இழந்தவர் இவர். தமிழக



மக்களிடமிருந்து இவர் சுருட்டிச் சேர்த்த பணமும் சொத்தும் நூற்றுக் கணக்கான கோடி உருவாக்கள் பெறும். மார்வாடிகள், குசராத்தியர் முதலான வடநாட்டு அட்டைகளின் உற்ற நண்பன் இவர். அதனால், அவர்களோடு பொங்கல் விழாக் கொண்டாடுவதைப் 'பேரின்ப விழா' என்று எண்ணுபவர்.

குட்டிமணி, செகன் ஆகிய இரண்டு ஈழத்துப் போராளிகளைச் சிங்களவெறி அரசிடம் பிடித்துக்கொடுத்துச் 'சாவாப் புகழ்' கொண் டவரும் இவரே.

அரசுத் தீர்மானங்கள் இருந்துங்கூடத் தமிழகத்தில் தமிழை ஆட்சிமொழியாகவோ கட்டாயக் கல்விமொழியாகவோ செய்யவும் தவறியது மட்டுமன்றி, அவ்வாறு செய்ய மனமற்றிருந்தவரும் இந்தத் "தமிழினத் தலைவரே"! ஆனால், தமிழில் நல்ல வணிகர். அதனா லேயே "வாழுந்தமிழ்" ஆனவர்!

தம்மிடமுள்ள கருப்புப்பணத்தை வெள்ளையாக்கவென்றே இவர்தம் குடும்பத்தார் நடத்தும் 'சன் டி வி.'யில் சென்னைத் தமிழுடன் ஆங்கிலம் கலந்த "தமிங்கிலத்தை" உலகெலாமுள்ள தமிழர்களுக்காகப் பரப்பிவருகிறவர். அதில் தனித்தமிழைப் பகடி செய்யும் ஒரு தொடர் தனிச்சிறப்பானது. தமிழால் வளர்ந்த வேற்றினம், அந்தத் தமிழின் முதுகிலேயே ஈட்டியைப் பாய்ச்சுகின்றது!

கருணாநிதியை அடுத்து வந்தவர், அவரது ஊழலை எதிர்ப் பதையே அரசியலாக்கி, தி. மு. கழகத்திலிருந்து பிரிந்து அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்தை நிறுவி, பின்னர் அக் கழகத்தை ஓர் அனைத்திந்திய அளவிலான கட்சியாக்கிய நடிகர் ம. கோ. இராமச் சந்திரன்.

இவர் அரசியலிலும் மிக நல்ல நடிகர். தமிழகத்தைத் தம்மின மாம் மலையாளிகளின் துணைத்தாயகமாகவே ஆக்கியவர் இவர். பேராயக் கட்சிக்கும் இந்தி(ய) வல்லரசுக்கும் நல்ல முட்டுத் தாங்கியாய் இருந்து சிறந்தவர். கருணாநிதியின் குறைகளே தம் வலிமை என்பதை நன்கறிந்திருந்த இவர், கூட்டுக்கொள்ளையில் எதிர்க்கட்சிக்கும் உரிய பங்கை வாங்கித் தந்தவர். தமிழக அரசியலை மேன்மேலும் உதிரிமய மாக்கிச் சேரி அரசியலே தமிழக அரசியல் என்றாக்கிய போனபார்ட் இவராவார். பிராமணியத்தின் மறுமலர்ச்சிக்கு உறுதுணையானது இவரது ஆட்சி என்றால் அது மிகையாகாது.

அடுத்து வாராது வந்த மங்கம்மா ஆட்சியைத்தான் கண்ணாரக் கண்டுவிட்டோமே! அந்த அரக்கத்தனமான செயலலிதா போட்ட கூத்து, திராவிட அரசியலில் ஒரு காட்சிதானே?

தமிழகத்தில் பொதுவாகத் தமிழர்கள் முதலமைச்சர்களாக வர முடிவதில்லை. அதேபோல், தமிழர்கள் சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர்களாகவும் வர முடிவதில்லை. தமிழகச் சட்டமன்றத்தில் நெடுநாளாய் எதிர்க்கட்சித் தலைவராயிருந்த கருத்திருமன் ஒரு கன்னடர். இன்று அதன் எதிர்க்கட்சித் தலைவராக இருக்கும் எசு. ஆர். பாலசுப்பிரமணியம் ஒரு தெலுங்கர்; தமிழ்த் தேசியம் என்றாலே தேள் கொட்டியதைப் போன்று துள்ளியெழுபவர். தமிழகத்தின் அவல நிலையைப் பார்த்தீர்களா?

உள்ளபடியே, சென்ற இருபத்தேழு ஆண்டுகளாகத் தமிழகத்து அரசியலில் நடந்துவருவது ஒருவகை நாயக்கர் ஆட்சியேதான் எனலாம். அந்த நாயக்கர் ஆட்சியை நன்கு நிலைப்படுத்துவோமெனச் சூளுரைத்தவண்ணம், தெலுங்குக் கொள்ளைக்காரனாகிய கட்ட பொம்முவின் துருப்பிடித்த வாளையேந்தி வலம்வருகிறவர், “குறிஞ்சாங்குளம் புகழ்” வை. கோபாலசாமி. மனவாடு தி. மு. க. வின் தலைவரான இவர்தான் தமிழகத்தின் அடுத்த முதல்வர் என்னும் மிதப்பில் தமிழகத்துத் தெலுங்கரினமே அவர் பின்னால் அணிவகுத்து நிற்கிறது! தமிழகத்தின் ஆளுநர் தெலுங்கர்; முதலமைச்சர் தெலுங்கர்; எதிர்க்கட்சித் தலைவர் தெலுங்கர் என்றே அமையும் நிலையில், தமிழகத்தில் தமிழரின் நிலை என்னாவது?

இந்தக் கூத்துக்கிடையில், தமிழகத்தில் மீண்டும் மராத்தியர் ஆட்சியை ஏற்படுத்துவதற்காக மராட்டிய நடிகர் இரசினி காந்த் நல்ல காலம் பார்த்துக் கிடக்கிறார்! அடுத்தடுத்து மீண்டும் பழைய நாயக்கர் ஆட்சியும் மராத்தியர் ஆட்சியுமென்று தமிழகம் இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் இவ் வந்தேறிகளின் வேட்டைக்காடாக இருந்து தொலைப்பது?

## இந்த அடிக்கு<br>எந்த நாயும் சாகும்!

மரங்களைத் திருடக் காடுகளைக் கண்டபடி அழித்துத் தமிழகத்தின் சுற்றுச்சூழலுக்கு மாபெரும் கேடுகளை விளைவித்து வானம் பொய்க்க வழிவகுத்தது திராவிட அரசியலாரும் ஆளுகிற அதிகார வகுப்பும் உருவாக்கிக்கொண்ட கூட்டுத்தான் என்பதை ஊரேயறியும். தமிழகத்தின் மழை வளமும் இயற்கை வளமும் கெடுவதற்கும்கூடத் திராவிட உதிரி அரசியலே பெருங்காரணமாகும்.

கள்ளவாக்குப் போடுவதை ஒரு கைவந்த கலையாக்கியது கழகங்களேயாகும். மேற்கு வங்கத்திலிருக்கும் மார்க்சியப் பொதுவுடைமையருக்கும் அந்தத் துறையில் ஒரு பாடமாயும் பல்கலைக்கழகமாயும்



நின்ற கழகங்கள் வளர்த்த அக் கலை, இத் துணைக்கண்டம் முழுவதும் ஆழப் பரவியும் புரையோடியும் வருகின்றது.

ஊழலிலும் தனிமுகட்டை எட்டியது கழகங்களின் ஆட்சிகளே. ஊழல் முறையை முறைப்படி நெறிப்படுத்தி அதற்கெனத் தனி இலக்கணங்களை வகுத்து, தமிழ் மக்களிடையே கண்டும் காணாத ஏனோ தானோ போக்கையும் இயலாமையையும் ஏற்படுத்தி, ஊழல் பெருச்சாளிகளாக உலா வருபவர்கள் திராவிட அரசியலாரேயாவர். தமிழகத்திலான இவ் வூழல் பண்பாட்டை வளர்த்ததில், பேராயக் கட்சி பெரியதா கழகங்கள் பெரியனவா வென்று ஆராய்ந்தால், கழகங்களே விண்ணுயர வெற்றிக்கொடி நாட்டுவது உறுதி.

பொதுவாழ்க்கையிலும் தனியாள் ஒழுக்கத்திலும் தனக்கெனத் தனிப்பாதையை அமைத்துக்கொண்டவை திராவிட முன்னேற்றக் கழகமும் அதன் வழித்தோன்றிய கழகங்களுமேயாகும். அண்ணா ஒரு மிகப் பெரிய மக்கள் தலைவராக வளர்ந்து சிறப்புற்று நின்ற நிலையில், அவருக்கும் நடிகை பானுமதிக்கும் இடையில் ஏதோ தொடர்பிருப்பதாக யாரோ கூறிய ஒரு குற்றச்சாட்டிற்கு, “நான் முற்றும் துறந்த முனிவனுமல்ல; அவள் படிதாண்டாப் பத்தினியுமல்ல” என்று அவர் விடையிறுத்ததொன்றும் ஒரு சின்னஞ்சிறிய தடுமாற்றம் அன்று.

அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, ம. கோ. இராமச்சந்திரன் ஆகிய மூவருமே பொதுவாழ்க்கையில் தங்களுக்கெனத் தனி இடங்களைப் பெற்ற பின்னரும்கூட, அவர்களால் பழைய தளர்ச்சிகளையும் மரபுகளையும் விட்டொழிக்கவே முடியவில்லை. அவற்றை அவர்கள் அரசியல் வாழ்விலும் புகுத்திக் கெடுத்தனர். இதனால், ஆண்-பெண் உறவில் ஒருவனுக்கு ஒருத்தி என்னும் உயரிய மரபும் ஒழுக்கமும் நடைமுறையில் அவர்களுக்கு இல்லாமல் போனது. இவர்களின் கூடாஒழுக்கத்தை ஞாயப்படுத்திய தொண்டர்களும் பலராவர். அவ் வொழுக்கம் பின்னர் அடிமட்டத் தொண்டர் வரை புரையோடி, ஒருத்திக்குமேல் பெண்டாட்டிகளையும் கூத்திகளையும் வைத்துக் கொள்வதே தலைவர்களுக்கான இலக்கணம் என்னும் உளத்தியலே எழுதப்படாத நெறியானது.

தமிழரினத்தையே தலைகுனியச் செய்யும் தனி ஒழுக்கம் இது!

ஆண்-பெண் உறவில் இறுக்கமில்லாத அமெரிக்காவிலும்கூட அந் நாட்டின் குடியரசுத்தலைவர்கள் பிறன்மனை விழைந்தனரென அடிக்கடி குற்றச்சாட்டுகள் எழுவதும், அதை அவர்கள் மறுப்பதும் அடுத்தடுத்து வருகிற செய்திகள். அமெரிக்கக் குடியரசுத்தலைவர் கிளிண்டனும் அதுபோன்ற குற்றச்சாட்டுக்கு ஆளானார்.

ஆனால், ஒருவனுக்கு ஒருத்தி என்ற ஒழுக்கத்தைத் தலைமேல் வைத்துப் போற்றும் தமிழர்தம் அரசியலில் மட்டும் பிறன்மனை விழைவது ஒரு பொருட்டன்று என்னும் ஏடாகூடம்!

தி. மு. க. வின் தொடக்கக் காலத்தில் நாடகங்களின் வழியாகவும் திரைப்படங்களின் வாயிலாகவும் பெண்மையைப்பற்றிப் புரட்சிமயமான கருத்துக்கள் முன்வைக்கப்பெற்றன. அவை யாவும் அதன் தலைமை கொண்டிருந்த பிராமண எதிர்ப்பு அரசியலின் கூறாகவே இருந்தன.

இப் புரட்சி வெளிப்பாடு எதனால் வந்தது?

ஒரு நூற்றாண்டுக்கு முன்புவரை, பொட்டுக்கட்டும் சாதியினர் பிராமணர்களுடன் மிக நெருங்கி உறவாடிவந்தனர். அவ் விரண்டு சாதியினருமே கோவிலையே நம்பியும், கோயிலைச் சுற்றியும் வாழ்ந்து வந்தமையால், அந் நெருக்கம் அவர்களுக்கு இயல்பாயிருந்தது.

> "ஏதோ காரணத்தினால் இவ்விரு சாதியினருக்கும் பிணக்கு ஏற்படவே, பார்ப்பனர்கள் நாடகங்களிலும் திரைப்படங்களிலும் தேவதாசிப் பெண்களை இழிவுபடுத்தினர். அதன் எதிர்வினைதான் அண்ணாத்துரை, கருணாநிதி ஆகியோரின் தொடக்கக்காலப் புரட்சித் தன்மை. தலைமைபெற்று அரசியலிலும் குமுகத்திலும் ஏற்புக் கிடைத்தவுடன், பார்ப்பனர்கள் நட்புக்கரம் நீட்டினர்; இவர்கள் அதைப் பற்றிக்கொண்டனர். ஆனால் வெளிப்படையாக அதைக் காட்டிக்கொள்ளவில்லை."[74]

இத்தகைய பின்புலமே திராவிடத் தலைவர்களுக்கு வாய்த்த தனியொழுக்க நெறிக்கேடும், கூடாஒழுக்கமுமாகும்.

கழகங்களின் மேடைத் தமிழைச் செவிமடுக்க வேண்டுமே! பாலினக் குறிப்புகள் சாடைமாடையாக இயைந்திடப் பெண்கள் காதுகொடுத்தும் கேட்கக் கூசும் வகையில் அருவருக்கத்தக்க முறையில் மிகவும் கொச்சையாகப் பேசவல்ல கழகங்களின் மேடைப்பேச்சுப் பாணியே ஒரு தனிப் பாங்கு!

இதனால்தான்,

> "மொத்த ஆய்வில், திராவிடர் இயக்கம் எத்தர்களின் ஒரு கூட்டம். தமிழகத்தில் ஓர் உண்மையான தமிழ்த் தேசிய இயக்கத்தின் தேவை இருப்பதைப் புரிந்துகொண்டு, அக் களத்தைத் தங்கள் ஆதாயத்திற்குப் பயன்படுத்தி, அரசியல், பொருளியல், பண்பாட்டியல், நடப்பியல் தளங்களில் தமிழகத்தை ஒரு பாலைவனமாக்கிவிட்ட குடிகேடர்களின் கும்பல்"[75]

என்ற மதிப்பீடு மிகச் சரியாகவே இருக்கிறது.



இவற்றாலெல்லாம், தமிழரினத்தை அடுத்துக்கெடுத்த வந்தேறி அரசியலே திராவிட அரசியல் என்னும் பெரும் பேருண்மை மெல்ல விளங்கித்தான் வருகின்றது.

## குரங்குப் புண்ணோ?

அண்டை அயல்மாநிலங்களில் வாழும் தமிழர்கள் தாக்கப்படும் போது, திராவிடக் கழகங்கள் அவர்களைப் புரப்பதற்கு முன்வரவோ, அவர்தம் உரிமைகளுக்காக உருப்படியாகப் போராடவோ செய்ததே இல்லை.

கருநாடகத்தை எடுத்துக்கொள்க. தமிழகத்தில் திராவிடப் பங்காளிக் கட்சிகளுக்கிடையில் நடக்கும் அருவருக்கத்தக்க சண்டைகளை வகைதொகை இல்லாமல் கருநாடகத் தமிழரின்மீது திணித்து, அவர்களைக் கூறுபடுத்தி, கன்னடரின் இளக்காரத்திற்கும் எதிர்ப்புக்கும் அந்தத் தமிழர்களை ஆளாக்கிய திருப்பணியை அக் கழகங்கள் தட்டாமல் செய்தன; தமிழர்களைக் கழகங்கள் ஒன்றுபடுத்த முயன்றதேயில்லை.

திராவிட மாயையில் சிக்குண்ட அக் கழகத்தவர்கள், ஒன் றுமே தெரியாத கன்னடர்களுக்கு இல்லாத பொல்லாத இனவெறி அரசியலைச் சொல்லிக் கொடுத்து, தொழிலகங்களிலும் மாநகராட்சியிலும் பிறவிடங்களிலும் தமிழர்க்கு எதிராக அவர்களைத் தூண்டிவிட்ட நிகழ்ச்சிகள் பலவுண்டு.

1970களில் கன்னடவெறி இயக்கங்கள் தலையெடுத்தபோது, அவர்களின் அடாவடித் தாக்குதல்களிலிருந்தும் வன்முறைகளிலிருந்தும் கட்சி அடிப்படையில் அந்தக் கழகங்கள் தமிழர்களைக் காக்க முனைந்ததேயில்லை. தமிழ் கற்பதென்னும் அடிப்படை உரிமையை 1982ஆம் ஆண்டில் கோகாக் அறிக்கையின் ஊடாகக் கன்னடர்கள் பறித்தனர். அதனால், கோலார் தங்கவயலில் மாணவர்கள் மாபெரும் மொழிப் போராட்டத்தில் இறங்கினர். அப்போது, இனவெறி பிடித்த கன்னடக் காவல்துறை துமுக்கிச் சூடு நடத்தி, நான்கு தமிழிளைஞர்களைக் கொன்றுப் பேயாடியது. தமிழர்களின் வீடுகளில் புகுந்து பெரிய அடக்குமுறை வெறியாடியது.

ஆனால், கழகங்களோ (குறிப்பாகத் திராவிட முன்னேற்றக் கழகம்) கருநாடகத் தமிழரின் போராட்டத்தைப் பச்சையாகக் காட்டிக் கொடுத்துக் கெடுக்கப் பார்த்தன.

வே. ஆனைமுத்து மட்டும் தங்கவயலுக்கு வந்து நிலைமையைக் கண்டறிந்து தமது **சிந்தனையாளன்** ஏட்டில் எழுதினார். பழ. நெடு

மாறன் தங்கவயலுக்கு வந்து பார்வையிட்டு, செய்தியாளர்களைக் கூட்டி ஓர் அறிக்கை விடுத்தார்.

கன்னடர் வந்து குடியேறியதனால் கன்னடமயமாக்கப்பெற்ற பெங்களூரிலும் தங்கவயலிலும்கூடத் தமிழர்களின் பிள்ளைகள் தங் களின் தாய்மொழியாம் தமிழைக் கற்கின்ற உரிமையைக் கருநாடக அரசு திட்டமிட்டு மெல்ல மெல்லப் பறித்தது. தமிழ்ப் பகுதிகளிலும் தமிழைப் படிக்கிற மாணவர்கள் ஏறக்குறைய இல்லையெனச் செய்த போது, தாய்மொழிக் கல்வி என்னும் அடிப்படை மாந்த உரிமையை மீட்கவும் காக்கவும் சுண்டுவிரலையும் அசைக்காத கருநாடகத்தில் உள்ள (பெரும்பாலும் தமிழர்களை மட்டுமே கொண்ட) திராவிடக் கழகங்கள், கருநாடகத் தமிழர்கள் உதைபடினும் வலிந்து நின்று கன் னடர்-தமிழர் எ(ஒ)ருமைப்பாட்டைப்பற்றி மட்டும் ஓயாமல் ஓலமிட்டு வருகின்றன.

1991ஆம் ஆண்டு திசம்பர் 13 அன்று பங்காரப்பாவை முதல்வ ராகக் கொண்ட கன்னடவெறிக் கருநாடக அரசே கருநாடகத் தமிழர் மீது திட்டமிட்டுக் கட்டவிழ்த்துவிட்ட இனப்படுகொலையில், ஓரா யிரம் தமிழர்கள் கொல்லப்பட்டனர். தமிழச்சிகளின் கற்பு சூறை யாடப்பட்டது. தமிழர்களின் வீடுவாசல்கள் சூறையாடப்பட்டுக் கொளுத்தப்பட்டன.

இந் நிலையிலும், கழகங்கள் மட்டும் கன்னடர்-தமிழர் எ(ஒ)ரு மைப்பாட்டைப்பற்றிக் கோழைத்தனமாகப் பேசித் தொலைக்கின் றன. இவற்றைப்போல் கன்னட-தமிழர் ஒற்றுமையைப்பற்றிப் பேசுகிற அமைப்புகளைக் கன்னடரிடம் அத்தி பூத்தாற்போல்தான் பார்க்க வியலும்.

கருநாடகத்துக் கத்தோலிக்கத் தமிழ்க் கிறித்துவர்கள் தங்களின் தாய்மொழியில் வழிபாடு நடத்துவதைக் கன்னடர்கள் அடாது தடுத்து வன்முறை வழியில் குழப்பம் விளைவித்துவந்தனர். இந் நிலையில், கருநாடக அரசின் ஒருசார்பு நிலையையும்பற்றித் "தமிழினத் தலைவ ருக்கு" விளக்கிச் சொல்லவெனக் கருநாடகத் தமிழ்க் கிறித்துவர்களின் குழுவொன்று தி. மு. க. தலைவர் கருணாநிதியின் வீடு தேடிச் சென்ற போது, அவர்களின் குறைகளைக் காதுகொடுத்தும் கேளாத அவர், "சிறியதையெல்லாம் குரங்குப் புண்ணாக்காதீர்கள்!" என்று மட்டும் திருவாய்மலர்ந்தருளிவிட்டு உள்ளே சென்றவர் சென்றவர்தான்!

திராவிடக் கழகங்கள், அயல் மாநிலத் தமிழர்கள் தாக்கப்படும் போதெல்லாம் அவர்தம் உயிர்களையும் உடைமைகளையும் உரிமை களையும் காத்த அழகு இது!



தமிழரால் நிறுவப்பெற்ற பெங்களூராம் தமிழர் நகரை அடா வடியான இனவன்முறையைக் கொண்டு வந்தேறிக் கன்னடர்கள் வன்சூழ்ச்சியால் கன்னடமயமாக்கிவிட்டனர். ஆனால், கருநாடகத் தமிழர்கள் பிழைப்பதற்காகச் சென்ற ஊரே பெங்களூர் என்று கருதும் தமிழகத் தமிழர்களோ, சூடும் பீடுமற்றுக் கிடக்கின்றனர். அப் பெங்க ளூரின் தமிழ்ப்பகுதியில் பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் அமைத்த திரு வள்ளுவரின் சிலையைக் கன்னடவெறியர்கள் திறக்க விடாமையால், அந்தச் சிலையைக் கன்னடக் காவல்துறை கந்தல்களாலும் தட்டி களாலும் கண்டபடி மூடிவைத்து இழிவுசெய்துவரும் கோலத்தை அவர்கள் கண்ணார வந்து பார்க்கட்டும்! தமிழர்கள் போற்றும் வான் புகழ் வள்ளுவருக்கே இந்தக் கதி! ஆனால், தமிழரிடம் தோன்றிய ஓர்மையினை அடுத்துக் கெடுத்த கன்னடரான ஈ. வெ. இரா.வுக்குத் தமிழகத்தின் மூலைமுடுக்குகளிலெலாம் செம்மாந்து நிற்கிற சிலைகள் பல! ஐயோ தமிழா, என்னே உன் அலங்கோலம்!

தெலுங்கன் தமிழனை என்றுமே அணைத்துக் கெடுத்தவன்; அடுத்தவனாம் கன்னடனைத் தமிழர்மீது ஏவிவிட்டே சூழ்ச்சி வழி களில் பயன்பெற்றவன். ஆனால், கன்னடனோ, அன்று முதல் இன்று வரை, தமிழையும் தமிழரையும் நேரடியாகவே பகைத்துக்கொண்டு முட்டி மோதத் துணிந்தவன். தமிழின் மீதும் தமிழர் மீதும் கொண்ட வெற்றுப்பகை, அக் கன்னடனின் நாடி நரம்பெலாம் மனநோயாய்ப் புரையோடிக் கிடக்கிறது. அதனால், தமிழை வெறுப்பதையும் தமி ழரைக் கெடுப்பதையுமே தன் தலைமேல்கொண்ட கடனாகக் கன் னடன், கருதுகின்றான். கோழை மலையாளியோ, தமிழனை என்றுமே இளக்காரமாகப் பார்ப்பவன்; இப்படித்தான் வாழவேண்டும் என்னும் நெறியற்றவன்.

பேதைத் தமிழனோ, "எல்லோரும் நம்மவரே" என்று பட்டாங்கு படிப்பவன். எல்லோருக்கும் நல்லவனாக இருந்து கெட்டவன். தெலுங்கன் தன்னுடைய மனத்தின் கதவை அடைத்துக்கொண்ட பின்னர், கன்னடனும் அதேபோல் தன் உள்ளத்தின் கதவை நன்றாய் இழுத்து மூடிகொண்ட பின்னர், மலையாளியும் தன் மனக்கதவைச் சாத்திக்கொண்ட பின்னர், தமிழன் மட்டுமே தன் திருவுளவாயை அகல விரியத் திறந்து வைத்திருப்பது எவ்வளவு பெரிய பேதைமை!

எதிருக்கு எதிர் நேர் ( — x — = + ) தானே? எதிருக்கு நேர் எதிர் மறை ( — x + = — ) தானே?

திராவிடர்கள் தமிழையும் தமிழரையும் நஞ்செனெ வெறுக்கின் றனர். ஆகவே, தமிழன் தனக்குத் தீங்கிழைத்த அந்தத் திராவிடரை முதலில் வெறுக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இவ்வளவு சின்னக்

கணக்குக்கூட விளங்கவில்லையெனின், தமிழன் உருப்படவே மாட் டான்.

## பிராமணியம் செத்துவிட்டதா?

ஈ. வெ. இரா. கண்ட திராவிட இயக்கத்தின் அறுதிநிலை எனப் படும் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம், பிராமணியத்தின் தொண்டரடிப்பொடியாராகி நிற்பதை உலகமே நன்கறியும். ஈ. வெ. இரா.வின் பிராமணரெதிர்ப்பு அவர்தம் வாழ்நாளிலேயே தோல்வி முகம் நோக்கிச் சென்றுவிட்டதை, அவரது 87ஆம் பிறந்த நாளன்று அவர் விடுத்த இச் செய்தியே புலப்படுத்தும்:

> "இந்தியாவுக்கு அண்மையில் வந்திருந்த ஓர் உருசியப் பெருமக னாரிடம் பார்ப்பனர் ஒருவர், 'இந்தியாவுக்கு யார் வந்தாலும் சங்கராச்சாரியாரைப் பார்த்துவிட்டு வருவதுதான் பெரிய வேலை' என்று சொல்லி, அவரை அச் சங்கராச்சாரியாரிடம் அழைத்துப் போனாராம். அந்த உருசியர், பலவற்றைப்பற்றிச் சங்கராச்சாரியாரிடம் பேசிவிட்டுக் கடைசியில், 'உங்கள் நாட் டில் உங்கள் மரபிற்கும், உங்கள் மதநெறிகளுக்கும் எதிராகப் பெரியார் ஓர் இயக்கம் நடத்துகிறாரே, அதைப்பற்றி உங்களு டைய கருத்து என்ன ?' என்று கேட்டாராம். அதற்குச் சங்கராச் சாரியார், 'ஆமாம் ! அப்படி ஓர் இயக்கம் நீண்ட நாட்களாக நடைபெற்று வருகின்றதென்றாலும், இன்றைக்குப் பதினேழு ஆண்டுகளுக்கு முன்வரையில் நாங்கள் மிகக் கவலை கொள்ள வேண்டிய அளவுக்கு அஃது இருந்தது. இப்போது அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய தேவையில்லா நிலை ஏற்பட்டுவிட் டது. அதன் பாட்டுக்கு அது நடைபெறுகிறதென்றாலும், அத னால் இன்று எங்களுக்கு எந்த வகையான தொந்தரவும் இல்லை என்றாராம்"[76]

ஈ. வெ. இராவின் இச் செய்தி, கவைக்குதவாத ஆரிய-திராவிடக் கொள்கையால் பிராமணியத்தை எளிதில் வீழ்த்த முடியாது என்ப தையே காட்டுகிறது.

பாதிப் பிராமணராகிக் கிடக்கும் சாதித் தமிழரால் பிராமணி யத்தை வீழ்த்தவே முடியாது என்னும் உண்மை மெய்ப்பட்டுவிட்டது. பிராமணனில்லாப் பிராமணியத்தையே நாடுகின்ற அவர்தம் அடி மனத்தில், பிராமணியம் என்ற கொடுநெறியினை வேரோடு களைய வேண்டும் என்னும் முழு ஈடுபாடு இருக்குமென்று எதிர்பார்ப்பது சரியன்று. சாதிநெறி ஒழிய வேண்டுமென உளமார எண்ணியவரெல் லாரும் இதனால் ஏமாந்து நிற்பதே கண்கூடான உண்மை.



"விடுதலையைப் பகுக்க முடியாது (Freedom is indivisible)" என் பது மார்க்சு படித்த பாடம். முதலாளியினுடைய விடுதலையிலிருந்து தொழிலாளியின் விடுதலையைப் பிரிக்க முடியாது என்பதே அதன் பொருள். முதலாளியால் தொழிலாளியை விடுவிக்க முடியாதென் பதை வரலாறு காட்டிவிட்டது; ஆனால், தன்னைத் தானே விடு வித்துக் கொள்வதன் வாயிலாக, அம் முதலாளியையே அத் தொழி லாளியால் முதலாளியம் என்ற சூழலிலிருந்து விடுவிக்க முடியுமென் பதே அதன் பொருளாகும்.

அதேபோல், பழந்தமிழராகிய மறையர்குடியினரைப் பிராம ணியம் என்னும் கொடிய அமைப்பிலிருந்து பிராமணராலோ பாதிப் பிராமணராகிய சூத்திரராலோ விடுவிக்க முடியவில்லை; சூத்திரர் களால் அவ்வாறு விடுவிக்கவும் முடியாது. ஆனால், தம்மைத் தாமே விடுவித்துக்கொள்ளும் பழந்தமிழரால், அப் பிராமணரையும் பாதிப் பிராமணரையும்கூட அந்தப் பொல்லாப் பிராமணியத்திடமிருந்து விடுவிக்க இயலும் என்பதே நாம் பெறும் ஒரு விளக்கம்.

## பகையழிக்கும் பாவேந்தர்

***"திராவிட இனவழி மரபினில் ஊன்றி நில் !", "வாழ்க திராவிடத் தமிழ்த் திருநாடு !"*** என்றெல்லாம் பாவேந்தர் ஒருகால் பாடியதைக் கோடிட்டுக் காட்டி, இன்று அடிக்காலிலேயே ஆட்டம் கண்டுவரும் 'திராவிடக்' கருத்தியலுக்கு உரம் சேர்க்க முயல்வாருமுண்டு.

தொடக்கத்தில் ***"எங்கெங்குக் காணினும் சக்தியடா !"*** என்று எழுதியவர்தாம் அப் பாவேந்தர். சங்கதமொழி இலக்கியங்களைத் தழுவிக் கதைப்பாட்டுகளைப் புனைந்தவர்தாம் அவர். பின்னர் ஈ. வெ. இரா.வுடன் இணைந்து அவரது 'திராவிடக்' கொள்கைக்காக நின்று, "திராவிடத் தமிழன்" போன்ற பொருந்தாக் கலப்புருவைக் கருவாக வைத்தும் அவர் பாடினார்.

ஆனால், தேவநேயப் பாவாணரோடும் அவருடைய தனித் தமிழ் இயக்கத்தோடும் தொடர்பேற்பட்டபின், அவர் அந்தத் திரா விடத்தை மெல்ல விட்டுத்தொலைத்தார். தமிழிலக்கியங்களெல்லாம் வெறும் குப்பைகளேயெனச் சொன்ன பெரியாரின் தமிழெதிர்ப்பு நிலைப்பாட்டிற்கு நேரெதிராக,

**நூலைப் படி – சங்கத்தமிழ்**
**நூலைப் படி ! – முறைப்படி**
**நூலைப் படி – சங்கத்தமிழ்**
**நூலைப் படி !**
**காலையில் படி, கடும்பகல் படி,**
**மாலை இரவு, பொருள்படும்படி !**[77]

என்று சொல்லிப் பெரியாரின் திராவிட மெய்யினக் கொள்கைக்கு நேரெதிரான மொழிவழித் தமிழ்த் தேசிய இனக் கொள்கைக்காக அவர் பாடலானார். தமிழுணர்வை மிகவும் பழித்து வந்த கன்னட ராம் ஈ. வெ. இரா.வுக்கு நேர்மாறாக,

**பிள்ளை பிறந்தேன், யாருக்காக ?**
**பெற்ற தமிழ்மொழிப் போருக்காக.**
**உள்ளம் இருப்பதும் தோள் இருப்பதும்**
**உயிர்நிகர் தமிழ்ச் சீருக்காக**[78]

என்று பாடினார். தாம் பிறந்த புதுவை மண்ணில், மிகச் சிறுபான் மையராம் தெலுங்கர்கள் போடும் கொற்றங்களை எல்லாம் கண்டு வெம்பியவராயிற்றே. அதனால்தான் பாவேந்தர்,

**தமிழ்நாட்டில் அயலார்க் கினி என்ன வேலை ?**
**தாவும் புலிக்கொரு நாய் எந்த மூலை ?**[79]

என்றும்,

**அவனவன் நாட்டில் அவனவன் வாழ்க மற்**
**றயல் நாட்டைச் சுரண்டுதல் அடியோடு வீழ்க!**[80]

என்றும்,

**பழந்தமிழ்க் குடிகள் வழிவந்த நாமே**
**பச்சைத் தமிழர்கள் நமதிந்த நாடு! – நல்**
**உழுந்தள வேனும் நமைப்பிறர் ஆள**
**உரிமையே இல்லை என்றுநீ பாடு!**[81]

என்றும் தமிழ்த் தேசியப் போர்ப்பரணி பாடினார்.

**எங்குப் பிறப்பினும் தமிழன் தமிழனே!**
**இங்குப் பிறப்பினும் அயலான் அயலானே!**
**செங்குருதி தன்னில் தமிழ்த்தன்மை வேண்டும்!**
**சிறிதும் அயலான் கலப்பின்மை வேண்டும்!**[82]

என்று பாடிய பாட்டில்,"திராவிடத் தமிழன்" என்னும் மாயை செத்து விட்டது. தமிழைத் தாழ்த்தித் "தாய்ப்பால் பைத்தியம்" என்றெழுதிய ஈ. வெ. இரா.வுக்கு நேர்மாறாக,

**தாய்மடியிற் குந்தித் தமிழ்முலைப்பால் உண்ணுகின்ற**
**சேய்தனக்கும் தாய்பேர் தெரிகிலையோ என்தாயே!**[83]

என்று பாடினார். திராவிட மெய்யினக் கொள்கையை அப்பால் எறிந்துவிட்டு,

**தூங்கும் புலியைப் பறைகொண் டெழுப்பினோம்;**
**தூய தமிழரைத் தமிழ்கொண் டெழுப்பினோம்!**[84]

என்று பாடியவரும் பாவேந்தரே.

"தமிழனுக்கென்று தனித்த முறையில் ஆரியம் கலவாத இலக் கியம் கிடையாது" என்று எழுதிய பெரியாருக்கு மாறாக,



**தமிழ்மொழி யெல்லாம் வடமொழி என்று**
**சாற்றுவார் பார்ப்பனர் பொய்யிலே நின்று;**
**தமிழ்மொழி யெல்லாம் தமிழ்மொழி என்று**
**சாற்றுவர் தமிழர்கள் மெய்யிலே நின்று!**[85]

என்று பாடிப் பாவாணர் மொழிந்த முதன்மொழிக் கொள்கைக்கு ஒப்புதல் தந்தவர்தாம் பாவேந்தர். பாவேந்தரின் இறுதிநிலை தமிழ்த் தேசியத்தோடு ஒன்றி, தமிழ்த் தேசியப் பாவலராக முதிர்ந்துவிட்ட செம்மையான கோலம்.

தமிழரின் இன்றைய இழிகேடுகளுக்கு, 'திராவிடம்' என்னும் நச்சுப்பூண்டு தமிழகத்தில் பற்றிப் படர்ந்ததும் ஒரு பெரிய காரணம். திராவிடக் கருத்தியலால் தமிழன் தன் அடையாளத்தை இழந்தான்; இன ஓர்மையை இழந்தான்.

கன்னடனுக்கென ஒரு கன்னடநாடும், தெலுங்கனுக்கு ஒரு தெலுங்குநாடும் மலையாளிக்கு ஒரு மலையாளநாடும் இருக்கையில், தமிழகம் மட்டும் தமிழ்நாடாக இல்லை. அது திராவிடநாடாகக் கெட்டு, தெலுங்கரும் கன்னடரும் மலையாளிகளும் அடுத்தடுத்து வந்து ஆளவும் சுரண்டவும் வழிவகுத்துள்ளது.

இதனால், கெங்குசாமி நாயுடுவின் உலகத் தெலுங்குக் கூட்டணி இன்று தமிழகத்தில் கொடிகட்டத் தொடங்கியுள்ளது. தமிழகத்தின் எல்லைப்பகுதிகள் மட்டுமன்றி, அதன் கருப்பகுதிகளிலும்கூடக் கன் னடமும் தெலுங்கும் மலையாளமும் உருதும் துணைஆட்சிமொழி களாக்கப்பட்டு, தமிழகமே இன்று மெல்ல பால்கனியமயமாக்கப்பட்டு (Balkanised) வருகின்றது. அந்த எல்லைப்பகுதிகளைத் திராவிடர்கள் அடுத்த நிலையில் மெல்ல மெல்லத் தம்வயமாக்கிக்கொண்டு, தமிழகத் திலிருந்து அப் பகுதிகளை அறுத்துக் கொண்டுபோகத் தமிழக அரசே கால்கோளிட்டுள்ளது.

திராவிடக் கருத்தியல் தமிழரினத்தை அணைத்துக் கெடுக்கும் புற்றுநோய்க் கழலையாய்ப் புடம்வைத்துத் தமிழரின் வாழ்வியலைக் கொன்று தின்றுகொண்டிருக்கின்றது. திராவிடர்களான கன்னடரும் தெலுங்கரும் துளுவரும் மலையாளிகளும் பொதுவாகப் பிராமணியத் திற்கும் ஆரியத்திற்கும் எதிரிகளாக இருந்ததேயில்லை. அவர்கள் அப் பிராமணியத்தின் அடிவருடிகளாகவும் ஆரியத்தின் கைப்பாவை களாகவுமே இருந்துவந்துள்ளனர். இதனால், பிராமணியத்திற்கும் ஆரியத்திற்கும் திராவிடத்திற்கும் இடையிலான உறவானது பொட்டுக் கட்டும் **மரூஉ** (சம்பந்தம்) உறவைப் போன்ற அரத்த உறவாக உள்ளது. ஒட்டுண்ணிகளாம் பிராமணியத்தையும் ஆரியத்தையும் ஏந்திவரும் எலிகளாகவே அத் திராவிடர்கள் இதுவரை இருந்துவந்துள்ளனர்.

இந் நிலையில், தமிழின் அவலத்தைப் பார்த்தீர்களா?

"ஆங்கிலத்தை அகற்றி ஓங்கி வளர்ந்தனர் இந்திபேசும் மக்கள்; தாய்மொழியை அரியணையேற்றி இந்திபற்றிக் கவலையற்றுள் ளனர் பிற மாநிலத்தார்; தமிழைப் புறக்கணித்தமையால் எல் லாத் துறைகளிலும் தடுமாறுகின்றனர் தமிழர்கள்"[86]

என்று நம்மவரில் சிலர் அதனால் புலம்புகின்றனர்.

### ஏறிட்டுப் பார், அதோ எழுகதிர்!

திராவிட அரசியலின்கீழ்த் தமிழர்களின் அறிவுத்தலைவனாம் பாவாணரும் தமிழர்களிடமிருந்து செவ்வனே மறைக்கப்பட்டார். உலகத் தமிழரினத்தின் தானைத்தலைவனாம் ஈழத்து எல்லாளன் பிரபாகரன் கழகங்களால் வஞ்சிக்கப்பட்டதுடன், மிக இழிவாகக் கொச்சைப்படுத்தப்பட்டும் வருகின்றார். அக வாழ்க்கையிலும் புற வாழ்க்கையிலும் நல்லொழுக்கத்திற்கு நல்ல சான்றோர்கள் அவர்க ளாவர். எந்தத் திராவிடத் தலைவராவது அவர்களுக்கு ஈடாகுவரோ?

அறிவுக்கு இனிப் பாவாணரே தலைமை! தமிழரின் மறத்திற்கு ஈழத்து எல்லாளனே தனிப்பெரும் தலைவன்! தமிழரின் வீரத்தை உலகத்தில் மீண்டும் அரங்கேற்றிவரும் அப் புதிய புறநானூற்றுத் தலை வனே தமிழர்களால் போற்றுதற்குரியவன்! இக்காலத்துக் கரந்தடிப் போருக்குப் புதிய இலக்கணமானது அவனது தமிழ் மறம்! தமிழ்நாட் டின் விடுதலைக்கு அத்தகைய தலைவனொருவன் இயல்பாகவே தோன்றும்வரை, அந்த எல்லாளனுடைய வீரமும் துணிவும் கொள்கை கோணாமையுமே தமிழகத்திற்கு வழிகாட்டட்டும்! இந்த அரிய ஓர்மை இனமானமிக்க தமிழிளைஞரிடம் வேர்கொண்டுவிட்டால், தமிழர்களுக்கு இனி எந்த இரவல் தலைவனும் போலித்தலைவனும் தேவையில்லை.

எழுவீர் தமிழிளம் காளையரே! இனமானமுள்ள தமிழரிடம் அவர்கள் ஏற்றிவைத்துள்ள தமிழ்த் தேசிய இனவுணர்வு தீச்சுடராய் ஒளிரட்டும்! தமிழ்த் தேசிய ஓர்மை ஓர் ஊழித்தீயாகையில் தமிழ ரினத்தை அடுத்துக்கெடுத்த திராவிடப் பகை அலறியடித்துக்கொண்டு ஓடும்! **தமிழகம் தனிநாடாய்—புதிய ஞாயிறாய்—சிவந்து எழ வேண்டுமாயின், "நாயை வெட்டிப் புதைத்து, கொடிமுந்திரிக்கு எரு வாக்குவதைப் போல்" அந்தப் பொல்லாத் 'திராவிட' மாயையைத் தமிழ்த் தேசியத்திற்கு நல்ல எருவாக்கி, முதலில் ஒரு நல்ல முன்னுரை எழுதுவோம்!**

## நூற்குறிப்புகள்


1. **அகநானூறு** *251:5 12.* 2. **நற்றிணை** *170:6-8.*

3. பாவேந்தர், **ஞாலப் பெரியார் பாதை, வேங்கையே எழுக!** பூம்பு கார் பதிப்பகம், சென்னை, *1990*, ப *52*.

4. Arthikaje, *Karnataka History, The Kadambas of Banavasi, http://www.ourkarna-taka.com/ states/historyofkarnataka*, p 2.

5. **கலிங்கத்துப்பரணி** *265*.

6. காசி ஆனந்தன், **"உலகத் தமிழினமே எண்ணிப் பார்!"** என்ற பாடல்.

7. **பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்**, மூன்றாம் தொகுதி, பதிப்பாசிரி யர் வே. ஆனைமுத்து, சிந்தனையாளர் கழகம், திருச்சிராப்பள்ளி, ப *1938*.

8. கவிஞர் கருணானந்தம், **தந்தை பெரியார்—முழு முதல் வாழ்க்கை வரலாறு**, சென்னை, *1979*, ப *301*.

9. மேற்படி, பப *210-11*. 10. மேற்படி, ப *217*.

11-13. குமரிமைந்தன், **தமிழ்த் தேசியம்** (கட்டுரை), *1994*.

14-17. **பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்**, முதல் தொகுதி, பப *547-48*.

18. குமரிமைந்தன், **தமிழ்த் தேசியம்** (கட்டுரை).

19. ஞா. தேவநேயன் (பாவாணர்), **தமிழ் வரலாறு**, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு (வ. ஆ, மாவட்டம்), *1967*, ப *294*.

20. முனைவர் கு. திருமாறன், **தனித்தமிழியக்கம்,** மருதம், திருச்சி, *1992*, பப *128-36*.

21. கவிஞர் கருணானந்தம், **தந்தை பெரியார்**, ப *421*.

22. **பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்**, மூன்றாம் தொகுதி, ப *1763*.

23. மேற்படி, ப *1766*. 24. மேற்படி, ப *1770*.

25. **பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்**, இரண்டாம் தொகுதி, ப *985*.

26. கவிஞர் கருணானந்தம், **தந்தை பெரியார்**, ப *414*.

27. **விடுதலை** *16.3.1967* ஆசிரியவுரை, கவிஞர் கருணானந்தம், **தந்தை பெரி யார்**, ப *477*.

28. எசு. எசு. பாண்டியன் சேர்வை, **நாயக்கர் கால தமிழர் வீழ்ச்சி** (கட் டுரை), **திராவிடன் வீரம்**, ஆடவை/சூன் *1994*.

29-33. கவிஞர் கருணானந்தம், **தந்தை பெரியார்**, பப *416-18, 430*.

34. புலவர் வி. பொ. பழனிவேலன், **ஈ. வெ. இரா. பெரியாரும், இந்தியும்** (கட்டுரை), **தென்மொழி,** தி. பி. *1996* பங்குனி *(1965* மார்ச்சு), ப *59*.

35-41. **பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்,** இரண்டாம் தொகுதி, பப *991-93*.

